| | | |
|---|---|---|
| மரம்வெட்டினான் | மரத்தைவெட்டினான் | எனவரும். |
| கல்லெறிந்தான் | கல்லாலெறிந்தான் | |
| கொற்றன்மகன் | கொற்றனுக்குமகன் | |
| மலைவீழருவி | மலையின்வீழருவி | |
| சாத்தன்கை | சாத்தனதுகை | |
| மலைநெல் | மலையின்கணெல் | |

௨௪௰. அல்வழிப் புணர்ச்சியாவதுவேற்றுமையல்லாத வழியிற்புணர்வதாம்.

௨௪௧. அதுவினைத்தொகையும், பண்புத்தொகையும், உவமைத்தொகையும். உம்மைத்தொகையும், அன்மொழித்தொகையும் என்னும்ஐந்துதொகைநிலைத்தொடரும்,எழுவாய்த்தொடரும்,விளித்தொடரும், வினைமுற்றுத்தொடரும், பெயரெச்சத்தொடரும், வினையெச்சத்தொடரும், இடைச்சொற்றொடரும், உரிச்சொற்றொடரும் என்னும் ஏழுதொகாநிலைத்தொடருமாகப்பன்னிரண்டுவகைப்படும்.

(உ-ம்,)

| | |
|---|---|
| கொல்யானை<br>ஓடுபாம்பு | ...வினைத்தொகை. |
| கருங்குதிரை<br>செந்தாமரை | ...பண்புத்தொகை. |
| சாரைப்பாம்பு<br>ஆயன்சாத்தன் | இருபெயரொட்டுப் பண்புத்தொகை. |

| | | |
|---|---|---|
| பவளவாய்<br>மதிமுகம் | } | ...உவமைத்தொகை. |
| இராப்பகல்<br>உடலுயிர் | } | ...உம்மைத்தொகை. |
| பொற்றொடி<br>தாழ்குழல் | } | ...அன்மொழித்தொகை. |
| சாத்தன்வந்தான்<br>மரம்வளர்ந்தது | } | ...எழுவாய்த்தொடர். |
| சாத்தாவா<br>கொற்றாகொள் | } | ...விளித்தொடர். |
| வந்தான்சாத்தன்<br>வளர்ந்ததுமரம் | } | ...வினைமுற்றுத்தொடர். |
| வந்தசாத்தன்<br>வருகின்றபுலி | } | ...பெயரெச்சத்தொடர். |
| வந்துபோனான்<br>வரச்சொன்னான் | } | ...வினையெச்சத்தொடர். |
| மற்றொன்று<br>இனிச்செய்வேன் | } | ...இடைச்சொற்றொடர். |
| நனிபேதை<br>கடிக்கமலம் | } | உரிச்சொற்றொடர்<br>எனவரும். |

பொன்னனவன் எனவருங்குறிப்பு வினைமுற்றுத்தொடர்வினைமுற்றுத்தொடரிலும், கரியகுதிரை எனவருங்குறிப்புப்பெயரெச்சத்தொடர்பெயரெச்சத்தொடரிலும், நாளன்றிப்போனான் எனவருங் குறிப்புவினையெச்சத்தொடர் வினையெச்சத்தொடரிலும் அடங்குமெனக்கொள்க.

அன்றியும் பாம்புபாம்பு என வொரு சொல்லடுக்கி வருதல் முதலாக வேற்றுமைவழியில் வாராதனவெல்லாம் அல்வழியாமெனவறிக.

உசஉ. இப்படி மொழிகள் வேற்றுமைவழியாலும் அல்வழியாலும் புணருமிடத்து இயல்பாகவாவது விகாரமாகவாவது புணரும்.

உசங. இயல்பு புணர்ச்சியாவது நிலைமொழியும்வருமொழியும் விகாரமின்றிப்புணர்வதாம். (உ-ம்,) பொன்மணி சாத்தன்கை எனவரும்.

உசச. விகாரப் புணர்ச்சியாவது நிலைமொழியேனும், வருமொழியேனும், இவ்விருமொழியுமேனும், தோன்றல் திரிதல் கெடுதல் என்னு மிம்மூன்றுவிகாரங்களுளொன்றையாவது பலவற்றையாவதுபெற்றுப்புணர்வதாம். (உ-ம்)

| | | |
|---|---|---|
| வாழைப்பழம் | தோன்றல். | எனவரும். |
| மட்குடம் | திரிதல், | |
| மரவேர் | கெடுதல். | |
| நிலப்பனை | கெடுதல், தோன்றல் | |
| பனங்காய் | கெடுதல், தோன்றல். திரிதல். | |

௨௬௫. இ, ஈ, ஐ, இம்மூன்றுயிரீற்றின்முன்னும் உயிர் முதன்மொழிவரின் இடையில் யகரவுடம்படு மெய்வரும்.

(உ-ம்.)

கிளி அழகு, கிளியழகு.
தீ அழகு, தீயழகு.
கை அழகு, கையழகு. } எனவரும்.

௨௬௬. அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ, இவ்வேழுயிரீற்றின்முன்னும் உயிர்முதன் மொழிவரின் இடையில வகரவுடம்படுமெய்வரும். (உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| பல | அணி | பலவணி. | எனவரும். |
| பலா | இலை | பலாவிலை. | |
| திரு | அடி | திருவடி. | |
| பூ | அரும்பு | பூவரும்பு. | |
| நொ | அழகா | நொவ்வழகா. | |
| கோ | அழகு | கோவழகு. | |
| கௌ | அழகு | கௌவழகு. | |

௨௬௭. ஏகார வுயிரீற்றின்முன் உயிர்முதன் மொழிவரின் இடையில் யகரமாவது வகரமாவது உடம்படுமெய்யாகவரும். (உ-ம்.)

அவனே அடித்தான், அவனேயடித்தான்
சே உழுதது, சேவுழுதது } எனவரும்.

௨௬௮. குற்றியலுகர வீற்றின்முன் உயிர்முதன்மொ

றிவந்தால் அவ்வுகரங்கெடும். உகரங்கெடநின்ற மெய்யின் மேல் வந்தவுயிரேறும். (உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| ஆடு | அரிது | ஆடரிது. | எனவரும். |
| அஃது | இல்லை | அஃதில்லை. | |
| வரகு | அரிது | வரகரிது. | |
| கொக்கு | ஒடிற்று | கொக்கோடிற்று. | |
| குரங்கு | ஏறிற்று | குரங்கேறிற்று. | |
| தெள்கு | அழகிது | தெள்கழகிது. | |

௨௪௧. வேற்றுமைப்பொருளில் உயிரீற்றுமரப்பெயர்முன் வல்லெழுத்துவர்தாற் சிலவற்றின்முன் வந்தவல்லெழுத்தும், சிலவற்றின்முன் அவ்வல்லெழுத்திற் கினமாகிய மெல்லெழுத்தும், சிலவற்றின்முன் அம்முச்சாரியையுந்தோன்றும்.

(உ-ம்.)

| | |
|---|---|
| பலாக்காய்<br>ஆத்திச்செதிள்<br>இலந்தைத்துளிர்<br>கொன்றைப்பூ | வல்லெழுத்துத் தோன்றின |
| விளங்காய்<br>காயாஞ்செதிள்<br>மாந்துளிர்<br>களம்பழம் | மெல்லெழுத்துத் தோன்றின |

| | |
|---|---|
| புளியங்காய்<br>அரையஞ்செதிள்<br>கடப்பந்துளிர்<br>வேப்பம்பழம் | அம்முச்சாரியை தோன்றிற்று. |

அன்றியும் ஐகாரவீற்று மரப்பெயர்களுட்சில பனங்காய், மாதளம்பழம் என ஐகாரங்கெட்டுஅம்முச்சாரியை பெற்றுவரும்.

இம்மரப்பெயர்களின்முன் அல்வழியில்வரும் வல்லினமும், இருவழியிலும் வருமெல்லினமும், இடைஇனமும் அவ்வவ்வீறுகூறுமிடத்துக்கூறப்படும்விகுதிகளைப்பெறும்.

உ௰௩. மூன்று சுட்டிடைச் சொன்முன்னும், எ என்னும் வினாவிடைச்சொன்முன்னும், யகரமொழிந்த மெய்களவரின் வந்தவெழுத்துமிகும். (உ-ம்.)

| | | |
|---|---|---|
| அக்கொற்றன் | இக்கொற்றன் | |
| உக்கொற்றன் | எக்கொற்றன் | |
| அந்நாள் | இந்நாள் | எனவரும். |
| உந்நாள் | எந்நாள் | |
| அவ்வாழ்வு | இவ்வாழ்வு | |
| உவ்வாழ்வு | எவ்வாழ்வு | |

உ௰௪. இவ்விடைச்சொற்களின்முன் யகரமும் உயிரும்வந்தால்இடையில் வகரந்தோன்றும். (உ-ம்.)

அவ்யானை இவ்யானை
உவ்யானை எவ்யானை } எனவரும்.
அவ்வுயிர் இவ்வுயிர்
உவ்வுயிர் எவ்வுயிர்

உருஉ. அந்த, இந்த, எந்த, என மருஉமொழிகளாய்வருஞ் சுட்டுவினாக்களின் முன் வரும் வல்லினமிகும். வருமெல்லினமும் இடையினமும்இயல்பாம். (உ-ம்.)

அந்தக்கல் இந்தக்கல் எந்தக்கல்
அந்தமலை இந்தமலை எந்தமலை } எனவரும்.
அந்தயானை இந்தயானை எந்தயானை

அகரவீறு.

உருங. அகரவீற்றுப் பெயர்ச்சொன் முன்வரும் வல்லெழுத்து இருவழியிலுமிகும். (உ-ம்.)

அல்வழி வேற்றுமை,
விளக்குறிது விளக்குறுமை } எனவரும்.
அதச்சிறிது அதச்சிறுமை

உருச. அகரவீற்றுச் செயவென்னும் வினையெச்சத்தின் முன்னும், இடைச்சொன்முன்னும், உரிச்சொன்முன்னும் வரும் வல்லினமிகும். (உ-ம்.)

உண்ணக்கொண்டான்
புலிபோலப்பாய்ந்தான் } வினையெச்சம்

பொன்னெனப்புறம்வேரார்-இடைச்சொல்

தவப்பெரியன் - உரிச்சொல் எனவரும்.

௨௫. அகரவீற்றுப்பெயரெச்சத்தின்முன்னும், வியங்கோள் வினைமுற்றின்முன்னும், அஃறிணைப்பன்மைவினைமுற்றின்முன்னும், ஏவல்வினைமுற்றின் முன்னும், ஆறும் வேற்றுமையின் அகரவுருபின்முன்னும், அம்மவென்னுமிடைச்சொன்முன்னும், வரும் வல்லினம் இயல்பாம். உ-ம்.

உண்டகுதிரை
உண்கின்றசெந்நாய் } பெயரெச்சம்.
உண்ணுததகர்

வாழ்கசொற்ற
வாழியசாத்தா } வியங்கோள் வினைமுற்று.

உண்டனகுதிரைகள்
உண்கின்றனசெந்நாய்கள்
உண்பனதகர்கள்
உண்ணுதனபன்றிகள் } அஃறிணைப் பன்மை வினைமுற்று

நடகொற்ற
கடசாத்தா } ஏவல்வினைமுற்று.

தனகைகள் - அகரவுருபு.

அம்மகொற்ற
அம்மசாத்தா } அம்மவென்னு மிடைச்சொல்.

அன்றியும் உண்ணியகொண்டான் உண்ணியசென்றன் எனச்செய்யுளிலே வருஞ்செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சத்தின்முன் வரும்வல்லினம் இயல்பாமெ

னவும், வாழியசாத்தா என்பது வாழிசாத்தா என வீறு கெடுமெனவும், கெட்டவிடத்து வரும்வல்லினம் இயல்பா மெனவும் அறிக.

௨௫௪. மேற்கூறிய அகரவீற்றுச்சொற்களின் முன் வருமெல்லினமும் இடையினமும் இருவழியிலும் இயல்பாம். (உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| விளநீண்டது | விளநீட்சி | எ-ம், |
| அதவலிது | அதவலிமை | |

| | |
|---|---|
| உண்ணமாண்டது | எ-ம், வரும். |
| உண்டமான் | |
| உண்டனவானரங்கள் | |

மற்றவைகளுமிப்படியே.

௨௫௫. பலசிலஎன்னும் அகரவீற்றுச்சொற்கள் தம் முன்னர்த்தாம்வரின் வருமொழிமுதலெழுத்து இயல்பாயும், மிக்கும், நிலைமொழிலகரமிரட்டித்தும், நிலைமொழியீற்று அகரங்கெட லகரம் றகரமாய்த் திரிந்துந் திரியாமலும் வரும். (உ-ம்.)

| | | |
|---|---|---|
| பலபல | சிலசில | எனவரும். |
| பலப்பல | சிலச்சில | |
| பல்லபல | சில்லசில | |
| பற்பல | சிற்சில | |
| பல்பல | சில்சில | |

அன்றியும் இவ்விருமொழிகளின் முன் பிறசொற்கள் வரின் பலகலை பல்கலை சிலசேனை சில்சேனை பலமலை பன்மலை சிலமலை சின்மலை பலயானை பல்யானை சிலயானை சில்யானை என நிலைமொழியீற்று அகரங்கெடாமலுங் கெட்டும் வருமெனவுமறிக.

ஆகாரவிறு.

௨௫அ. ஆகாரவீற்றுப் பெயர்ச்சொன்முன் வரும்வல்லினம் இருவழியிலுமிகும். (உ-ம்.)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| தாராக்கடிது | தாராக்கடுமை | எனவரும். |
| மூங்காச்சிறிது | மூங்காச்சிறுமை | |
| உசாத்தீது | உசாத்தீமை | |
| வயாப்பெரிது | வயாப்பெருமை | |

௨௫௯. அல்வழியில் ஆ மா-ஆமா-என்கிற மூன்றுபெயர்களின்முன்னும், யாவென்னும் விஞப்பெயர் முன்னும், ஆ என்னும் ஈற்றுவிஞவிடைச்சொன்முன்னும், ஆகாரவீற்றஃறிணைப் பன்மைவினைமுற்றின் முன்னும், ஆகாரவீற்றேவல்வினைமுற்றின்முன்னும், மியாவென்னு மிடைச்சொன்முன்னும் வரும்வல்லினம் இயல்பாம், (உ-ம்.)

ஆகுறிது மாசிறிது ஆமாபெரிது எ-ம்
யாகுறியன யாசிறியன யாதியன எ-ம்

சாத்தனுகொண்டான் } எ-ம்.
கொற்றனுசென்முன்

உண்ணுகுதிரைகள்
ஓடாசெந்நாய்கள்
நடவாதகர்கள்
செய்யாபன்றிகள் } எ-ம்.

தாகொற்று
வாசாத்தா } எ-ம்,

கேண்மியாகொற்று
சென்மியாசாத்தா } எ-ம்.வரும்.

அன்றியும் உண்ணுக்கொற்றன் எனஈறுகெட்டபெய ரெச்சத்தின்முன்னும், உண்ணுப்போனான் எனஈறுகெட்ட வினையெச்சத்தின் முன்னும் செய்யாக்கொடுத்தான் என உடன்பாட்டு வினையெச்சத்தின்முன்னும்வரும் வல்லினமி குமெனக்கொள்க.

௨௪௰. மேற்கூறிய ஆகாரவீற்றுச் சொற்களின்முன் வருமெல்லினமும்,இடையினமும்இருவழியிலுமியல்பாம்.

தாராஞான்றது தாராஞாற்சி
மூங்காவலிது மூங்காவன்மை } எ-ம்.

ஆர்ண்டது ஆநீட்சி
ஆயாது ஆயாப்பு } எ-ம்.

யாநீண்டன
யாவலியன } எ-ம்.

| | |
|---|---|
| கொற்றனாடர்தான்<br>கொற்றனுவந்தான் | எ-ம். |
| உண்ணாநாகங்கள்<br>நடவாயானைகள் | எ-ம். |
| தாநாகா<br>வாவளவா | எ-ம். |
| கேண்மியாநாகா | எ-ம், வரும். |

சுறவுக்கோடு புறவுச்சிறை எனக்குற்றெழுத்தின் கீழ்நின்ற ஆகாரங்குறுகி உகரச்சாரியை பெறுமெனவும் உகரச்சாரியை பெற்றவிடத்துவரும் வல்லினமிகுமெனவுங்கொள்க. இகரவீறு.

௨௬௬. வரும் வல்லினம் இகரவீற்று மொழிகளிலே அல்வழியில் எழுவாய்த்தொடரிலும், வினைமுற்றுத்தொடரிலும்,உம்மைத்தொகையிலும்,இயல்பாம். இருபெயரொட்டுப் பண்புத்தொகையிலும், உவமைத்தொகையிலும்,செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சத்தொடரிலும்,குறிப்புவினையெச்சத்தொடரிலும்,இடைச்சொற்றொடரிலும், உரிச்சொற்றொடரிலும்,சிறுபான்மை பிறதொடரிலு மிகும்.

(உ-ம்.)

| | |
|---|---|
| பருத்திகுறிது<br>கொடிசிறிது | ...எழுவாய்த்தொடர் |
| உண்டிசாத்தா<br>உண்ணுதிகொற்றா | ...முன்னிலைவினைமுற்று |

எறிசாத்தா<br>படிகொற்றா } ...ஏவல்வினைமுற்று

பரணிகார்த்திகை<br>வெள்ளிசனி } ...உம்மைத்தொகை

வரும்வல்லின மியல்பாயின.

மாசித்திங்கள்<br>அலிக்கொற்றன் } ...பண்புத்தொகை.

காவிக்கண் - உவமைத்தொகை.

தேடிக்கொண்டான்<br>ஓடிப்போனான் } ...செய்தென்னும் வினையெச்சம்.

நாளன்றிச்செய்தான்<br>நாளின்றிப்போனான் } குறிப்புவினையெச்சம்.

இனிச்செய்வேன் - இடைச்சொல்.

கடிக்கமலம் - - உரிச்சொல்.

வரும்வல்லினமிக்கன.

௨௧௨. இகரவீற்று மொழிகளின்முன் வேற்றுமையில்வரும் வல்லினம்மிகும். (உ-ம்.)

கரிக்கோடு - கிளிச்சிறகு<br>நரித்தலை - பருத்திப்பூ<br>மாசித்திருவிழா - காவித்தடம் } எனவரும்.

வரும்வல்லினம் ஏரிகட்டினான் என இரண்டனுருபு கெடவருமிடத்து இயல்பாமெனவும், ஏரிகளை குழவிகை

எனச்சிறுபான்மை அஃறிணைப்பெயரிடத்து வேற்றுமையில் இயல்பாமெனவுங்கொள்க.

சுவையையுணர்த்தும் புளி என்பதன்முன் வலிவரின் புளிக்கறி புளிங்கறி என வரும்வல்லெழுத்தாவது அதற்கினமாகியமெல்லெழுத்தாவது மிகுமென்றறிக.

௨௬௩. மேற்கூறிய இகரவீற்று மொழிகளின்முன் மெல்லினமும் இடையினமும்வரின் அவை இருவழியினு மியல்பாம். (உ-ம்.)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| பருத்திநீண்டது | பருத்திநீட்சி | எனவரும். |
| கொடிவலிது | கொடிவன்மை | |
| தேடிநின்றான் | ... | |
| ஓடிவந்தான் | ... | |

மற்றவைகளுமிப்படியே.

ஈகாரவீறு.

௨௬௪. ஈகாரவீற்றுப் பெயர்ச்சொன்முன் இருவழியிலும்வரும் வல்லினமிகும். (உ-ம்.)

| அல்வழி | வேற்றுமை | |
|---|---|---|
| ஈக்குறிது | ஈக்குறுமை | எனவரும். |
| தீச்சிறிது | தீச்சிறுமை | |
| வீப்பெரிது | வீப்பெருமை | |

வரும்வல்லினம் அல்வழியில் பீ குறிது நீ குறியை

எனப் பீ நீ என்னும் பெயர்களின்முன் இயல்பாகவும், ஈ கொற்று, சொத்தா என ஈகாரவீற்றேவல் வினைமுற்றின் முன் இயல்பாகவும், மீ என்பதன்முன் மீகண் என இயல் பாதலன்றி மீக்கூற்று, மீக்கோள்,என வல்லெழுத்தும் மீ ந்தோல் என மெல்லெழுத்து மிகவும் பெறுமெனவறிக.

உ௬௫. மேற்கூறிய ஈகாரவீற்று மொழிகளின்முன் இருவழியினு மெல்லினமும் இடையினமும் வரின் அவை இயல்பாம். (உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| ஈநீண்டது | ஈநீட்சி | எனவரும். |
| தீவலிது | தீவன்மை | |

முற்றிய லுகரவீறு.

உ௬௬. முற்றியலுகரவீற்றுப் பெயர்களின்முன் இருவழியிலும் வரும்வல்லினமிகும். (உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| வடுக்குறிது | வடுக்குறுமை | எனவரும், |
| மதுச்சிறிது | மதுச்சிறுமை | |
| பசுத்தீது | பசுத்தீமை | |
| திருப்பெரிது | திருப்பெருமை | |

உ௬௭. முற்றுகரவீற்று அது இது உது என்னுஞ் சுட் டுப்பெயர்முன்னும் எது என்னும் வினைப்பெயர்முன்னும், ஒரு இரு அறு எழு என்னும் விகாரப்பட்டுவரும் எண்ணி ன்முன்னும், ஏவல்வினைமுற்றின்முன்னும், ஒடு என்னு மூ

ன்றனுருபின்முன்னும், அது என்னும் ஆறனுருபின்முன்னும் வரும்வல்லினம் இயல்பாம். (உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| அதுகுறிது | அதுகண்டான் | எனவரும். |
| இதுசிறிது | இதுசெகுத்தான் | |
| உதுபெரிது | உதுதந்தான் | |
| எதுசிறிது | எதுபெற்ருன் | |
| ஒருகை | அவனொடுசென்ருன் | |
| இருசேனே | அவனதுகை | |
| அறுதானே | ... ... ... | |
| எழுபுவி | ... ... ... ... | |
| விடுசாத்தா | ... ... ... | |
| எடுகொற்ரு | ... ... ... | |

உகூ௮. மேற்கூறிய முற்றிய லுகரவீற்று மொழிகளின்முன் உயிர்வரின் அவ்வுயிர் பொதுவிதியால் இருவழியிலும் வந்த வகரவுடம்படு மெய்யோடியையதன்றிச் சிறுபான்மை நிலைமொழியீற்று உகரங்கெட அவ்வுகரங் கெடகின்ற மெய்யோடியையும். மெல்லினமும் இடையினமும்வரின் அவை இருவழியிலு மியல்பாம். (உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| பசுவழகிது | பசுவழகு | எ-ம். |
| கதவழகிது | கதவழகு | |
| வரவரிது | வரவருமை | |

| | | |
|---|---|---|
| வடுநீண்டது | வடுநீட்சி | எ-ம், வரும். |
| பசுவலிது | பசுவன்மை | |

மற்றவைகளுமிப்படியே.

## குற்றிய லுகரவீறு.

உ௬௧. வன்றொடர் குற்றியலுகரவீற்று மொழிகளின்முன் வரும்வல்லினம் இருவழியிலுமிகும். (உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| கொக்குக்கடிது | கொக்குக்கடுமை | எனவரும். |
| கச்சுச்சிறிது | கச்சுச்சிறுமை | |

படித்துச்சென்றான், கற்றுப்பேசினான் என வினைச்சொன்முன் அல்வழியிலே வல்லினமிக்கன.

உ௬௨. மென்றொடர் குற்றியலுகரவீற்று மொழிகளின்முன் வரும்வல்லினம் அல்வழியிலியல்பாம். வேற்றுமையிலே மிகும். (உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| குரங்குகடிது | குரங்குக்கால் | எனவரும். |
| அம்புதீது | அம்புத்தலை | |

அறிந்துகொண்டான், நடந்துசென்றான் என வினைச்சொன்முன் அல்வழியில்வல்லினமியல்பாயின.

உ௬௩. நெடிற்றொடர், ஆய்தத்தொடர், உயிர்த்தொடர், இடைத்தொடர் என்னும் இந்நான்குதொடர் குற்றியலுகரவீற்று மொழிகளின்முன் வரும்வல்லினம் இருவழி

யிலுமியல்பாம். (உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| நாகுகடிது | நாகுகடுமை. | எனவரும். |
| எஃகுதீது | எஃகுதீமை. | |
| வரகுசிறிது | வரகுசிறுமை | |
| தெள்குபெரிது | தெள்குபெருமை | |

ஏகுகால், அஃகுபிணி, பொருதுசென்றான், எய்து கொன்றான் எனவினைச்சொன்முன் அல்வழியில்வல்லின மியல்பாயின.

௨௭௨. மேற்கூறிய அறுவகைக்குற்றிய லுகரவீற்று மொழிகளின்முன் வருமெல்லினமும் இடையினமும் இரு வழியிலுமியல்பாம் (உ-ம்.)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| கொக்குநெடிது | கொக்குநெடுமை | எனவரும். |
| குரங்குவந்தது | குரங்குவருகை | |
| நாகுஞான்றது | நாகுஞாற்சி | |
| எஃகுநீண்டது | எஃகுநீட்சி | |
| வரகுமாண்டது | வரகுமாட்சி | |
| தெள்குவலிது | தெள்குவன்மை | |

இக்குற்றிய லுகரமொழிகள் வேற்றுமைப் பொருளிலே கொக்கின்கண், வண்டின்கால், நாகின்புறம், எஃகின்சிறுமை, வரகின்மாட்சி, தெள்கின்வன்மை எனப்பெரு

ம்பாலும் இன்சாரியைபெற்றேவரு மென்றறிக.

௨௭௩. டவ்வையும் றவ்வையும் இறுதியிலுடைய நெடிற்றொடர் உயிர்த்தொடர் குற்றியலுகரவீற்று மொழிகளின்முன்னர் நாற்கணமும்வரின் வேற்றுமையிற்பெரும்பாலும் உகரமேறிய டகர றகர மெய்களிரட்டும். (உ-ம்.)

ஆட்டூர் ஆற்றூறல்
ஆட்டுக்கால் ஆற்றுக்கால்
ஆட்டுமயிர் ஆற்றுமணல்
ஆட்டுவால் ஆற்றுவழி } எ-ம்.

பகட்டடி வயிற்றணி
பகட்டுக்கால் வயிற்றுக்குடல்
பகட்டுமார்பு வயிற்றுமயிர்
பகட்டுவால் வயிற்றுவலி } எ-ம்.

சிறுபான்மை மலட்டுப்பசு, வறட்டாடு என அல்வழியில் இரட்டலும், வெருக்குக்கண் எருத்துமாடு என இருவழியிலும் பிறவொற்றிரட்டலும் உளவெனக்கொள்க.

௨௭௪. மென்றொடர் குற்றியலுகரவீற்று மொழிகளிலே சில நாற்கணமும்வரின் இருவழியிலும் வன்றொடர் குற்றியலுகரமாகவும்பெறும். (உ-ம்.)

கன்று ஆ கற்றா
மருந்து பை மருத்துப்பை
சுரும்பு நாண் சுருப்புநாண்
கரும்பு வில் கருப்புவில் } எ-ம்.

| | | |
|---|---|---|
| என்பு உடம்பு | எற்புடம்பு | எ-ம். |
| அன்பு தளை | அற்புத்தளை | |
| குரங்கு மனம் | குரக்குமனம் | |

அன்றியும் பண்டு காலம் பண்டைக்காலம், இன்றுநாள் இற்றைநாள் எனமென்றொடர் குற்றியலுகர மொழிகள் சிறுபான்மை ஐகாரச்சாரியை இறுதியிற்பெற்று வருதலு முளவெனக்கொள்க.

உஎ௫. திசைப்பெயர்களும் பிறபெயர்களும் வந்துபுணருமிடத்துக் குற்றியலுகர வீற்றுத் திசைப்பெயர்களுட் சில ஈற்றுயிர்மெய்யுங்ககரமெய்யுங் கெடவும்சிலஈற்றுயிர் மெய்கெட்டுமேனின்ற றகரமெய் னகர மெய்யாகவும் லகர மெய்யாகவுந் திரியவும்பெறும். (உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| வடக்கு | கிழக்கு | வடகிழக்கு | எனவரும். |
| குணக்கு | கடல் | குணகடல் | |
| தெற்கு | மேற்கு | தென்மேற்கு | |
| மேற்கு | கடல் | மேல்கடல் | |

கிழக்கு என்பது கீழ்திசை கீழ்த்திசை கீழைத்திசை எ-ம், மேற்கு என்பது மேலைத்திசை எ-ம், விகாரப்பட்டு வருமெனவுங்கொள்க.

இத்திசைப்பெயர்கள் உம்மைத்தொகையிலே கிழக்குமேற்கு தெற்குவடக்கு என இவ்விகாரங்களின்றியும் வருமென வறிக.

உஎ௬. ஒன்றுமுதற் பத்தீறுகிய குற்றியலுகரவீற் றெண்ணுப்பெயர்கள் தம்முன் எண்ணுப்பெயரும் பிறபெயரும் வரின் இரண்டுபணம்,மூன்றுபொருள்,நான்குநாடு, ஐந்தகாசு, ஆறுசாத்திரம், ஏழாயிரம், எட்டுத்திசை, ஒன்பதுவாயில், பத்துக்காதம், என இயல்பாய் வருதலன்றி ஓராயிரம் ஒருபது எ-ம், ஈராயிரம் இருபது எ-ம், மூவாயிரம் முப்பது எ-ம், நாலாயிரம் நாற்பது எ-ம், ஐயாயிரம் ஐம்பது எ-ம், அறுயிரம் அறுபது எ-ம். எழாயிரம் எழுபது எ-ம், எண்ணுயிரம் எண்பது எ-ம்,தொள்ளாயிரம் தொண்ணூறு எ-ம், பன்னிரண்டு - பதினுயிரம் - பதிற்றுக்கோடி எ-ம், பெரும்பாலும் விகாரப்பட்டுவரும். இவற்றுள் ஏழு என்பது முற்றியலுகரவீற் றெண்ணெனவறிக.

இவற்றுள் ஒன்றென்னு மெண்ணுப்பெயர் இயல்பாக வாராதெனவும்,ஒன்பதின்முன் பத்தும் நூறும்வரின் நிலைமொழியின் இறுதி பதுகெட்டு முறையே ஒன் தொண்ணெனவும், தொள்ளெனவுந் திரிய வருமொழியாகிய பத்து நூறெனவும்,நூறுஆயிரமெனவுந் திரியுமெனவும், இவ்வெண்ணுப்பெயர்களின்முன்வரும் பத்தென்னும் எண்ணுப்பெயரினது இடையொற்று ஒருபதனைக் கெடுமெனவும் கெட்டவிடத்துஒருபஃது எனஆய்தம்வருமெனவும்அறிக.

உஎஎ. ஒன்பதொழிந்த ஒன்றுமுதற் பத்தீறுகிய வெண்ணுப்பெயர்களை இரட்டித்துச் சொல்லுமிடத்து நிலைமொழியின் முதலெழுத்தொழிய அல்லனவெல்லாங் கெ

ட்டு முதனெடில் குறுகவும், வந்தன உயிராயின் வகர வொற்றும், மெய்யாயின் வந்தவெழுத்தும், மிகவும் பெறும். (உ-ம்.)

| | | | |
|---|---|---|---|
| ஒன்று | ஒன்று | ஒவ்வொன்று | எனவரும். |
| இரண்டு | இரண்டு | இவ்விரண்டு | |
| மூன்று | மூன்று | மும்மூன்று | |
| நான்கு | நான்கு | நந்நான்கு | |
| ஐந்து | ஐந்து | ஐவ்வைந்து | |
| ஆறு | ஆறு | அவ்வாறு | |
| ஏழு | ஏழு | எவ்வேழு | |
| எட்டு | எட்டு | எவ்வெட்டு | |
| பத்து | பத்து | பப்பத்து | |

ஊகாரவீறு.

உஎஅ. ஊகாரவீற்றுப் பெயர்ச்சொற்களின்முன்இரு வழியிலும் வரும் வல்லினமிகும். (உ-ம்.)

| அல்வழி | ... வேற்றுமை. | |
|---|---|---|
| கொண்மூக்குறிது | கொண்மூக்குறுமை | எ-ம். |
| ஊச்சிறிது | ஊச்சிறுமை | |
| கூப்பெரிது | கூப்பெருமை | |

| | | |
|---|---|---|
| ஆடூக்குறியன் | ஆடூக்கை | எ-ம், வரும். |
| மகடூச்சிறியள் | மகடூச்செவி | |

பூவென்பதன்முன் பூக்கொடி என வரும்வல்லெழுத்து மிகுதலன்றிப்பூங்கொடிஎன அதற்கினமெல்லெழுத்து

மிகுமெனவுங்கொள்க.

உஎக. மேற்சொல்லப்பட்ட ஊகாரவீற்று மொழிகளின்முன் வருமெல்லினமும் இடையினமும் இருவழியிலுமியல்பாம். (உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| கொண்மூஞான்றது | கொண்மூஞாற்சி | எனவரும் |
| ஊநீண்டது | ஊநீட்சி | |
| பூவலிது | பூவன்மை | |
| ஆடூநின்முன் | ஆடூநிலை | |
| மகடூவலியள் | மகடூவன்மை | |

உஅ௰. எகரம் ஒரெழுத்தொருமொழியாய் வினாவிடைச்சொல்லாக வருவதன்றி வேறுமொழிகளின் இறுதியில் வாராமையாலும், அவ்விடைச்சொற்கு முன்னரேவிதிகூறப்பட்டமையாலும் இங்கே அவ்வீற்றிற்கு விதிகூறவில்லை.

ஏகாரவீறு.

உஅக. ஏகாரவீற்றுப் பெயர்ச்சொற்களின்முன் இருவழியிலும்வரும் வல்லினமிகும்.வருமெல்லினமு மிடையினமு மியல்பாம். (உ.ம்.)

| அல்வழி | வேற்றுமை | |
|---|---|---|
| ஏக்கடிது | ஏக்கடுமை | எனவரும். |
| சேச்சிறிது | சேச்சிறுமை | |
| தேப்பெரிது | தேப்பெருமை | |
| பேத்தீது | பேத்தீமை | |
| சேச்சிறிது | சேச்சிறுமை | |

| | | |
|---|---|---|
| ஞான்றது | ஞாற்சி | |
| சேணீண்டது | சேணீட்சி | |
| தேவலிது | தேவன்மை | எனவரும். |
| பேமாண்டது | பேமாட்சி | |
| நேயாது | நேயாப்பு | |

உ௮உ. ஏகாரவீற்றிடைச்சொன்முன் வருமூவினமெய்களும் இயல்பாம். (உ-ம்.)

| | |
|---|---|
| அவனேகொண்டான் | |
| அவனேநின்றான் | எனவரும். |
| அவனேவந்தான் | |

(ஐகாரவீறு.)

உ௮௩. ஐகாரவீற்றுச்சொற்களின்முன் வரும்வல்லினம் அல்வழியில் எழுவாய்த்தொடரிலும், வினைமுற்றுத்தொடரிலும், உம்மைத்தொகையிலும் இயல்பாம். பண்புத்தொகையிலும், உவமைத்தொகையிலும், இடைச்சொற்றொடரிலும், சிறுபான்மை பிறதொடரிலுமிகும். (உ-ம்.)

| | |
|---|---|
| யானைகுறிது | |
| குதிரைசிறிது | எழுவாய். |
| விடலைபெரியன் | |

| | |
|---|---|
| உண்டனைகொற்றா | ...முன்னிலைவினைமுற்று. |
| தின்கின்றனைசாத்தா | |

| | |
|---|---|
| களைகொற்றா | ...ஏவல்வினைமுற்று. |
| அமைசாத்தா | |

நன்மைதீமை
பெருமைசிறுமை } ...உம்மைத்தொகை.

வரும்வல்லினமியல்பாயின.

உரிமைத்தொழில் ... பண்புத்தொகை.

சாரைப்பாம்பு
சித்திரைத்திங்கள் } இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

தாமரைக்கண்
குவளைக்கண் } ...உவமைத்தொகை.

மற்றைச்சாதி - இடைச்சொற்றொடர்-எனவரும்.

வரும்வல்லினமிக்கன.

௨௮௪. வேற்றுமையில் ஐகாரவீற்றுச்சொற்களின்முன் வரும்வல்லினமிகும். (உ-ம்)

யானைக்கோடு பூனைச்செவி
சித்திரைத்திருவிழா குவளைத்தடம் } எனவரும்.

யானைகொண்டான் எனவிரண்டனுருபு கெடவருமிடத்தவரும்வல்லினமியல்பாதலு முளவெனக்கொள்க.

௨௮௫. மேற்சொல்லிய ஐகாரவீற்று மொழிகளின்முன் வருமெல்லினமும் இடையினமும் இருவழியினு மியல்பாம். (உ-ம்.)

யானைநின்றது யானைநிறம்
குதிரைவந்தது குதிரைவால்
உண்டனநாகா ......
களைவளவா ......
குவளைவிழி ...... } எனவரும்.

ஒரெழுத்தொரு மொழியாகிய தனிஐம்முன் கைஞ்ஞான்றது, கைஞ்ஞாற்சி, கைந்நீண்டது, கைந்நீட்சி, கைம்மாண்டது, கைம்மாட்சி என வருமெல்லினம் இருவழியிலு மிகுமெனவறிக.

(ஒகரவீறு.)

உ௮௬. ஒகரவீற்று ஏவல்வினைமுற்றின்முன் வருமுவினமெய்களுமிகும். தவ்வென்னுமேவல் வினைமுற்றும்இவ்விதி பெறும். (உ-ம்.)

| | | |
|---|---|---|
| நொ கொற்று | நொக்கொற்று | எனவரும். |
| நொ நாகா | நொந்நாகா | |
| நொ வளவா | நொவ்வளவா | |
| து கொற்று | துக்கொற்று | |
| து நாகா | துந்நாகா | |
| து வளவா | துவ்வளவா | |

வினையாதலின் அல்வழியிலேமிக்கன.

ஓகாரவீறு.

உ௮௭. ஓகாரவீற்றுப்பெயர்களின்முன் இருவழியிலும் வரும்வல்லினமிகும். மெல்லினமுமிடையினமுமியல்பாம்.

(உ-ம்.)

| அல்வழி | வேற்றுமை | |
|---|---|---|
| ஓக்குறிது | ஓக்குறுமை | எ-ம். |
| சோச்சிறிது | சோச்சிறுமை | |
| கோப்பெரிது | கோப்பெருமை | |

ஒஞான்றது ஒஞாற்சி
சோஙீண்டது சோஙீட்சி } எ-ம், வரும்.
கோவலிது கோவன்மை

உ௮௮. ஓகாரவிடைச்சொன்முன் வருமுவின மெய்களு
மியல்பாம்.

அவனோகொண்டான்
அவனோநின்றான் } எனவரும்.
அவனோவந்தான்

## ஔகாரவிறு.

உ௮௯. ஔகார வீற்று முதனிலைத்தொழிற்பெயரும்.
ஏவல்வினைமுற்றுந் தம்முன் வலியு மெலியும் வகரமும்வரி
ன் உகரச்சாரியைபெறும். தொழிற்பெயரின் சாரியையுக
ரத்தின்முன் வரும்வல்லெழுத்துமிகும். ஏவல் வினையின்
சாரியையுகரத்தின்முன் வலியியல்பாம். (உ-ம்.)

அல்வழி. வேற்றுமை.

கௌவுக்கடிது கௌவுக்கடுமை
கௌவுநீண்டது கௌவுநீட்சி } எ-ம்.
வௌவுவலிது வௌவுவன்மை

கௌவுகொற்றா
கௌவுநாகா } எ-ம்,வரும்.
வௌவுவளவா

உயிரீற்றுப்புணரியல்-முற்றிற்று.

உ-வது.

# மெய்யீற்றுப்புணரியல்.

———————

உகு௰. மெய்யீற்றின்முன் உயிர்வரின்வந்தவுயிர் இருவழியிலும் அம்மெய்யோடு கூடியொன்றும். (உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| ஆணழகிது | ஆணழகு | எனவரும். |
| வேலழகிது | வேலழகு | |
| புகழரிது | புகழருமை | |

உகுக. தனிக்குற்றெழுத்தைச் சேர்ந்தமெய்கள் தம்முன் உயிர்வந்தால் இருவழியிலும் இரட்டிக்கும். இரட்டித்தமெய்ம்மேல் வந்தவுயிரேறும். (உ-ம்.)

| அல்வழி ... | வேற்றுமை. | |
|---|---|---|
| மண்ணரிது | மண்ணருமை | எனவரும். |
| பொன்னழகிது | பொன்னொளி | |
| கல்லழகிது | கல்லழகு | |

உகுஉ. யகரமல்லாதமெய்கள் தம்முன் யகரம்வந்தால் இருவழியிலும் இகரச்சாரியை பெறுதலுமுண்டு.

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| வேளியாவன் | வேளியானை | எனவரும். |
| மாலியாது | மாலியாப்பு | |
| ஆணியாது | ஆணியாப்பு | |

வேள்யாவன் என இகரச்சாரியை பெறாமல் வருதலே பெரும்பான்மையாம்.

௨௧௩. ஞ், ண், ந், ம், ல், வ், ள், ன், என்னும் இவ்வெட்டு மெய்யீற்று முதனிலைத் தொழிற்பெயரும் ஏவல்வினைமுற்றுந் தம்முன் யகரமல்லாத மெய்கள்வரின் உகரச் சாரியைபெறும். தொழிற்பெயரின்சாரியை உகரத்தின்முன் வரும்வல்லினமிகும் ஏவல்வினையின்சாரியை உகரத்தின்முன்வரும் வல்லினமும் இவ்விருமொழிகளின் சாரியையுகரத்தின்முன் வருமெல்லினமு மிடையினமு மியல்பாம்.

(உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| உரிநுக்கடிது | உரிநுக்கடுமை | எ-ம். |
| உண்ணுஞான்றது | உண்ணுஞாற்சி | |
| பொருநுவலிது | பொருநுவன்மை | |

| | |
|---|---|
| உரிநுகொற்று | எ-ம், வரும் |
| உண்ணுநாகா | |
| பொருநுவளவா | |

திரும், செல், வவ், நள், தின் முதலியவற்றோடும் இவ்வாறே யொட்டிக்கொள்க.

பொருநுக்கடிது என நகரவீற்றுச் சாதிப்பெயரும், வெரிநுக்கடிது என நகரவீற்றுச்சினைப்பெயரும், உகரச் சாரியை பெறுமெனவுங்கொள்க.

இவ்வெட்டீற்று ஏவல்வினைகளிலே உண்கொற்று, தின்சாத்தா, வெல்பூதா, நள்வளவா என ண் ன் ல் ள் என்னுமிந்நான்றும் உகரச்சாரியை பெறுமலுநிற்கும்.

௨௩௪. மொழிகளுக்கிறுதியில் வரும்-ஞ், ங், ண், ன், ம், ய், ர், ழ், ல், ள், வ், என்னும் பதினொரு மெய்களிலே ஞகரவீற்றுமொழி உரிஞ் என்பதொன்றும், ஙகரவீற்றுமொழி பொருந் வெரிந் என்பன இரண்டுமேயன்றி வேறுமொழிகளின்மையாலும், அவைகட்கு மேற்கூறிய பொதுவிதியேயன்றி வேறுவிதியின்மையாலும் அவ்விரண்டீறுமொழித்து மற்றைய ஒன்பதீற்று மொழிகளுக்குஞ் சிறப்புவிதி கூறப்படும்.

ணகரனகரவீறு.

௨௩௫. ணகர னகரவீற்று மொழிகளின்முன் வல்லினம்வரின் அல்வழியில் அவ்விருமெய்களும்இயல்பாம். வேற்றுமையில் ணகரம் டகரமாகவும், னகரம் றகரமாகவுந் திரியும். அவ்விருவழியிலும் வருந் தகரம் ணகரத்தின்முன் டகரமாயும், னகரத்தின்முன் றகரமாயுந்திரியும். (உ-ம்)

| அல்வழி | ... வேற்றுமை. | |
|---|---|---|
| மண்குறிது | மட்குடம் | எ-ம். |
| மண்சிறிது | மட்சாடி | |
| மண்டீது | மட்டூண் | |
| மண்பெரிது | மட்பானை | |
| பொன்குறிது | பொற்குடம் | எ-ம், வரும். |
| பொன்சிறிது | பொற்சாடி | |
| பொன்றீது | பொற்றூண் | |
| பொன்பெரிது | பொற்பானை | |

அல்வழியில் வரிற்கொள்ளும் எனச்செயினென்னும் வாய்பாட்டு வினையெச்சத்தினிறுதி னகரம் றகரமாய்த்திரிதலும், மண்கொணர்ந்தான் பொன்கொணர்ந்தான் என இரண்டனுருபுகெட வருமிடத்தும், மண்புகுந்தும் வான் பறந்து மாலுமயனுங் காணுவொருபொருள் என ஏழனுருபுகெட வருமிடத்தும், திரியாதியல்பாதலு முளவெனக் கொள்க.

உ௧௬. ணகர னகரவீற்று மொழிகளின்முன் மெல்லினமும் இடையினமும்வரின் இறுதி ணனக்கள் இருவழியிலும் இயல்பாம். அவ்விருவழியிலும் வருநகரம் ணகரத்தின்முன் ணகரமாயும், னகரத்தின்முன் னகரமாயுந் திரியும். (உ-ம்.)

| அல்வழி | ... வேற்றுமை. | |
|---|---|---|
| மண்ணான்றது | மண்ணாற்சி | எ.ம், |
| மண்ணீண்டது | மண்ணீட்சி | |
| மண்மாண்டது | மண்மாட்சி | |
| மண்யாது | மண்யாப்பு | |
| மண்வலிது | மண்வன்மை | |
| பொன்னான்றது | பொன்னாற்சி | எ-ம், வரும். |
| பொன்னீண்டது | பொன்னீட்சி | |
| பொன்மாண்டது | பொன்மாட்சி | |
| பொன்யாது | பொன்யாப்பு | |
| பொன்வலிது | பொன்வன்மை | |

௨௩௭. தனிக்குற்றெழுத்தைச்சாராத ணகரனகரங்கள் வருநகரந்திரிந்தவிடத்து இருவழியிலுங்கெடும். (உ-ம்)

அல்வழி ... வேற்றுமை.

தூணன்று தூணன்மை } எ-ம்
அரணன்று அரணன்மை

வானன்று வானன்மை } எ-ம். வரும்.
அரசனல்லன் அரசனன்மை

பசுமணன்று பசுமணன்மை செம்பொனன்று செம்பொனன்மை எனத்தொடர்மொழியிலே குறிலின்பின்னின்ற ணனக்களும் இருவழியிலும் வருநகரந்திரிந்தவிடத்துக் கெடுமெனவுமறிக.

௨௩௮. பாண், அமண், பரண், கவண், என்றுமொழிகளின் இறுதி ணகரம்வேற்றுமையில் வல்லினம்வரின் இயல்பாம். (உ-ம்.)

பாண்குடி அமண்குடி } எனவரும்
பரண்கால் கவண்கால்

௨௩௯. தன் என் நின் என்னும் விகாரமொழிகளின் இறுதினகரம் வேற்றுமையில் பெரும்பாலுந் திரியாதியல்பாம். (உ-ம்.)

தன்கை என்செவி } எனவரும்.
நின்பகை

௨௪0. குயின், ஊன், எயின், எகின், தேன், மீன், மின், பின், பன், கன்என்னுமொழிகளின் இறுதினகரம்

வேற்றுமையில் வல்லினம்வரின் இயல்பாம். (உ-ம்)

| | | |
|---|---|---|
| குயின்கடுமை | மின்கடுமை | எனவரும். |
| ஊன்சிறுமை | பின்சிறுமை | |
| எயின்குடி | பன்றீமை | |
| எகின்கால் | கன்கடுமை | |
| தேன்கடுமை | ... | |
| மீன்கண் | ...... | |

இவைகளிலே எயின், எகினென்பன எயினக்குடி எகினவாழ்வு என அகரச்சாரியைபெறுதலும், தேனென்பது தேக்குடம் தேங்குடம் என இறுதி னகரங்கெட ஒருகால் வரும்வல்லெழுத்தும் ஒருகால் அதற்கின மெல்லெழுத்து மிகப்பெறுதலும் தேமொழி என மெல்லெழுத்து வருமிடத்து ஈறுகெடுதலும், மீன், பின், பன், கன்னென்றுமிந்நான்குசொற்களும், மின்னுக்கடிது பின்னுச்சிறிது பன்னு நன்று கன்னுவலிது என யகரமல்லாதமெய்கள்வருமிடத்து உகரச்சாரியை பெறுதலும் உளவெனவுமறிக.

மகரவீறு.

௩௱௧. மகரவீற்றுமொழிகளின்முன் அல்வழியில்வல்லினம்வரின் எழுவாய்த்தொடரிலும், உம்மைத்தொகையிலும், செய்புமென்னும் பெயரெச்சத்தொடரிலும், வினைமுற்றுத்தொடரிலும், இடைச்சொற்றொடரிலும், சிறுபான்மைபிறதொடரிலு நிலைமொழியீற்றுமகரம் வரும்வல்லெழுத்திற்கினமாய்த்திரியும். பண்புத்தொகையிலும், உவமை

த்தொகையிலும், இறுதி மகரங்கெடும், கெட்டவிடத்து வரும் வல்லினமிகும். (உ-ம்.)

மரங்குறிது } ...எழுவாய்.
யாங்கொடியேம்

நிலந்தீறு } ... உம்மைத்தொகை.
பணங்காசு

செய்யுங்காரியம் } ...பெயரொச்சம்.
தின்னுஞ்சோறு

உண்டனஞ்சிறியேம் } ...வினைமுற்று.
தின்றனங்குறியேம்

சாத்தனுங்கொற்றனும் } ...உம்மையிடைச்சொல்.
பூதனுந்தேவனும்

வட்டக்கடல் } ...பண்புத்தொகை.
சதுரப்பலகை

கமலக்கண் ... உவமைத்தொகை.

எனவரும் மற்றவைகளுமிப்படியே.

மரம்பெரிது எனப்பகரம் வருமிடத்து இறுதிமகரம் இயல்பாமெனக்கொள்க.

௩௱௨. மகரவீற்று மொழிகளின்முன் வேற்றுமையிலே வல்லினம்வரின் நிலைமொழியிறுதி மகரங்கெடும். கெட்டவிடத்துவரும் வல்லினமிகும். (உ-ம்.)

மரக்கோடு மரச்செதிள் } ...எனவரும்.
பழத்தோல் நிலப்பரப்பு

செயங்கொண்டான், மணங்கண்டான் என இரண்டனுருபுகெட வருமிடத்திறுதி மகரங்கெடாது வரும் வல்லெழுத்திற்கினமாய்த் திரியுமெனவுங்கொள்க.

௩௱௩. தனிக்குற்றெழுத்தின் கீழ்நின்ற மகரம் இருவழியிலும் வரும்வல்லினத்திற்கு இனமாகத்திரியும். (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| கங்குறிது | கங்குறுமை | எனவரும். |
| அஞ்சிறிது | அஞ்சிறுமை | |
| செங்கோழி | நங்கை | |
| ... | தஞ்செவி | |
| ... | எந்தலை | |

௩௱௪. மகரவீற்றுமொழிகளின்முன் மெல்லினம்வரின் இறுதிமகரம் இருவழியிலுங்கெடும். (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| மாஞான்றது | மாஞாற்சி | எனவரும். |
| மாநீண்டது | மாநீட்சி | |
| மாமாண்டது | மாமாட்சி | |

௩௱௫. தனிக்குறிலின் கீழ்நின்ற மகரம் ஞநக்கள்வந்தால் அவ்வெழுத்தாகத் திரியும். (உ-ம்)

அஞ்ஞானம் தஞ்ஞானம் } எனவரும்.
எந்நூல் தந்நூல் நந்நூல்

௩௱௬. மகரவீற்றுமொழிகளின்முன்உயிரும் இடை

யினமும்வரின் அல்வழியில் எழுவாய்த்தொடரிலும், உம்மைத்தொகையிலும், செய்யுமென்னும் பெயரொச்சத்தொடரிலும், வினைமுற்றுத்தொடரிலும், இடைச்சொற்றொடரிலும், சிறுபான்மை பிறதொடரிலு நிலைமொழியிறுதிமகரங்கெடாமனிற்கும் பண்புத்தொகையிலும்,உவமைத்தொகையிலும், இறுதிமகரங்கெடும். (உ-ம்.)

| | |
|---|---|
| மரமரிது<br>மரம்வலிது | ...எழுவாய். |
| வலமிடம்<br>நிலம்வானம் | ...உம்மைத்தொகை. |
| உண்ணுமுணவு<br>தின்னும்வளவன் | ...பெயரொச்சம். |
| உண்டனமடியேம்<br>உண்டனம்யாம் | வினைமுற்று. |
| அரசனுமமைச்சனும்<br>புலியும்யானையும் | உம்மையிடைச்<br>சொல் |
| வட்டவாழி<br>வட்டயாழ் | பண்புத்தொகை. |
| பவளவிதழ்<br>பவளவாய் | உவமைத்தொகை<br>எனவரும் |

௲௱எ. மகரவீற்றுமொழிகளின்முன் வேற்றுமையில் உயிரும் இடையினமும்வரின் இறுதிமகரங்கெடும். (உ-ம்)

| | | |
|---|---|---|
| மரவடி | மரவில் | எனவரும். |
| மரயாழ் | மரவேர் | |

செயமடைந்தான் மரம்வெட்டினான் என இரண்டனுருபுகெட வருமிடத்து இறுதிமகரம் இயல்பாதலு முளவெனக்கொள்க.

மகரவீற்று மொழிகளின்முன் உயிர்வரின் ஒரோவிடத்து குளம் ஆம்பல் குளாம்பல் மரம் அடி மராடி என வேற்றுமையிலும், ஓணம் அவிட்டம் ஓணவிட்டம், கோணம் அகோணம் கோணகோணம் என அல்வழியிலும், நிலைமொழியீறும் வருமொழிமுதலும் விகாரப்பட்டு வருதலும், ஈம் கம் உரும் என்று மிம்மூன்று சொற்களும், ஈமுக்கடிது, கம்முநீண்டது, உருமுவலிது என யகரமல்லாதமெய்கள் வருமிடத்து உகரச் சாரியைபெறுதலும்உளவெனவுமறிக..

யரழவீறு.

௱௮. ய் ர் ழ் என்று மிம்மூன்று மெய்யீற்று மொழிகளின்முன் வரும் வல்லினம் அல்வழியின் எழுவாய்த்தொடரிலும், உம்மைத்தொகையிலும், வினைமுற்றுத்தொடரிலும், சிறுபான்மை பிறதொடரிலும். இயல்பாம் பண்புத்தொகையிலும், உவமைத்தொகையிலும், வினையெச்சத்தொடரிலுஞ் சிறுபான்மை பிறதொடரிலுமிகும். (உ-ம்.)

| | |
|---|---|
| வேய்குறிது | எழுவாய். |
| வேர்சிறிது | |
| வீழ்பெரிது | |

| | |
|---|---|
| பேய்பூதம்<br>நார்பூ<br>இகழ்புகழ் | உம்மைத்தொகை. |
| உண்டாய்கொற்ற<br>உண்டனிர்சாத்தரே<br>உண்டீர்பூதரே | முன்னிலை வினைமுற்று |
| செய்கொற்ற<br>சேர்சாத்தா<br>வாழ்பூதா | ஏவல்வினைமுற்று. |

வல்லினமியல்பாயின.

| | |
|---|---|
| மெய்க்கீர்த்தி<br>கார்ப்பருவம்<br>பூழ்ப்பறவை | பண்புத்தொகை. |
| வேய்த்தோள்<br>கார்க்குழல்<br>காழ்ப்படிவம் | உவமைத்தொகை. |

போய்க்கொண்டான், வினையெச்சம்.

வல்லினமிக்கன.

உண்ணியர்போவான் என ரகரவீற்று வினையெச்சத்தின்முன் இயல்பாமெனவும், ழகரவீறு முன்னிலைவினைமுற்றிற்கும் வினையெச்சத்திற்கும் இன்றெனவுமுணர்க.

ஙாக. ய் ர் ழ் என்னு மிம்மூன்றீற்றுமெய்களின்முன் வரும்வல்லினம் வேற்றுமையிலேமிகும். (உ-ம்.)

| | | |
|---|---|---|
| நாய்க்கால் | தேர்த்தலை | எனவரும். |
| பூழ்ச்செவி | ... | |

வரும்வல்லினம் வேய்பிளந்தான்,தேர்செய்தான்,தமிழ்கற்றான் என இரண்டனுருபுகெட வருமிடத்தும், வாய்புகுவது எனச்சிறுபான்மை ஏழனுருபுகெட வருமிடத்தும்,இயல்பாதலும், பேய்கோட்பட்டான், பேய்க்கோட்பட்டான், சூர்கோட்பட்டான்,சூர்க்கோட்பட்டான் எனச்செயப்பாட்டுவினைமுடிக்குஞ் சொல்லாகவருமிடத்தும், கீழ்குளம்,கீழ்க்குளம், எனக்கீழென்பதன் முன்னும் ஒருகாலியல்பாயும் ஒருகான்மிக்கும் வருதலுமுளவெனக்கொள்க

உ௱ய. மேற்கூறிய ய் ர் ழ் என்னுமிம்மூன்றீற்றுமொழிகளின்முன்வரு மெல்லினமும், இடையினமும் இருவழியிலுமியல்பாம். (உ-ம்.)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| வேய்ஞான்றது | வேய்ஞாற்சி | எனவரும். |
| வேர்நீண்டது | வேர்நீட்சி | |
| வீழ்யாது | வீழ்யாப்பு | |
| உண்டாய்நாகா | ... | |
| உண்டீர்வளவரோ | ... | |

மற்றவைகளுமிப்படியே.

மெய்ஞ்ஞான்றது, மெய்ந்நீண்டது, மெய்ம்மாண்டது-எ-ம். மெய்ஞ்ஞாற்சி,மெய்ந்நீட்சி, மெய்ம்மாட்சி எ-ம். தனிக்குறிற்கீழ்நின்ற யகரமெய்ம்முன் வருமெல்லின மிரு

வழியிலு மிருமெனவும், வேயாது,வேயாப்பு எனநெடிற்கீழ்நின்ற யகரமெய் யகரம்வரின் இருவழியிலுங் கெடுமெனவும், தமிழக்கோமான், தாழக்கோல் என இவ்விருமொழியும் ஒரோவிடத்து அகரச்சாரியை பெறுமெனவுங் கொள்க.

### லகரளகரவீறு.

௩௱௰௭. லகரளகரவீற்று மொழிகளின்முன் வல்லினம்வரின் வேற்றுமையி னிலைமொழியீற்று லகரம் றகரமாகவும், ளகரம் டகரமாகவுந்திரியும். அல்வழியில் இறுதி லளக்கள் ஒருகா லியல்பாகவும், ஒருகாற்றிரியவும்பெறும். வருந்தகரம் லகரத்தின்முன் றகரமாகியும் ளகாத்தின்முன் டகரமாகியுந் திரியும்.

(உ-ம்.)

வேற்றுமை.

| | | |
|---|---|---|
| கற்குடம் | பாற்குடம் | எ-ம், |
| கற்சாடி | பாற்சாடி | |
| கற்றூண் | விரற்றீமை | |
| கற்பானை | விரற்பெருமை | |
| கட்குடம் | வாட்குறுமை | |
| கட்சாடி | வாட்சிறுமை | |
| கட்டாழி | பொருட்டீமை | |
| கட்பானை | அருட்பெருமை | |

அல்வழி.

| | | |
|---|---|---|
| கல்குறிது | கற்குறிது | எ-ம், வரும். |
| கல்சிறிது | கற்சிறிது | |
| - | கற்றீது | |
| கல்பெரிது | கற்பெரிது | |
| முள்குறிது | முட்குறிது | |
| முள்சிறிது | முட்சிறிது | |
| முள்பெரிது | முட்பெரிது | |
| - | முட்டீது | |

௩௱௰௨. குற்றெழுத்தின் பின்னின்ற லளக்கள் அல்வழியில் வருந்தகரந் திரிந்தவிடத்து றகர டகரங்களாகத் திரிதலன்றி, ஆய்தமாகவுந்திரியும். (உ-ம்.)

| | | |
|---|---|---|
| கற்றீது | கஃறீது | எனவரும். |
| முட்டீது | முஃடீது | |

நெற்கடிது, செற்சிறிது, கொற்றீது, சொற்பெரிது என இந்நான்குசொற்களி னிறுதி லகரம் அல்வழியில்வரும் வல்லினத்தின்முன் உறழாது திரிபொன்றையே பெறுமென்றறிக.

௩௱௰௩. குற்றெழுத்தைச்சாராதலளக்கள் அல்வழியில் வருந்தகரந்திரிந்த விடத்துக்கெடும். (உ-ம்.)

| | | |
|---|---|---|
| வேறீது | தோன்றறியுன் | எனவரும் |
| வாடீது | வேடீயன் | |

மேற்கூறிய ளகரங்கள் சிறுபான்மை தோன்றறிவமை வேடமை என வேற்றுமையிற்கெடுதலும், காற்றுணை,தாட்டுணை என அல்வழியிற் கெடாதுதிரிதலு முளவெனவு மறிக.

குற்றெழுத்தைச்சாராத ளகரங்கள் தகரமொழிந்தவல்லினம்வரின் கால்கடிது, மரங்கள்கடிய என எழுவாய்த்தொடரில் உறழாதியல்பாதலும், வேற்படை, வாட்படை எனப் பண்புத்தொகையிலும், வந்தாற்செய்வேன் எனச்செயினென்னும் வாய்பாட்டு வினையெச்சத்தொடரிலும், உறழாதுதிரிதலும், கால்குதித்தோடி, வாள்போழ்ந்தட்ட என மூன்றனுருபு கெடவருமிடத்தும், ஏனல்காப்பவள், திரள்காப்பவன் என இரண்டனுருபு கெடவருமிடத்துந் திரியாதியல்பாதலுமுள வெனக்கொள்க.

௲௰௪. லகர ளகரவீற்று மொழிகளின்முன் மெல்லினம்வரின் இருவழியிலும் லகரம் னகரமாயும், ளகரம் ணகரமாயுந் திரியும். வருநகரம் லகரத்தின்முன் னகரமாயும், ளகரத்தின்முன் ணகரமாயுந்திரியும். (உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| கல்-கன்ஞெரிந்தது | கன்ஞெரி | எனவரும். |
| வில்-வின்னீன்டது | வின்னீட்சி | |
| புல்-புன்மாண்டது | புன்மாட்சி | |
| முள்-முண்ஞெரிந்தது | முண்ஞெரி | |
| புள்-புண்ணீண்டது | புண்ணீட்சி | |
| கள்-கண்மாண்டது | கண்மாட்சி | |

௯௱௰௮. குற்றெழுத்தைச்சாராத லளக்கள் இருவழி யிலும் வருநகரந்திரிந்தவிடத்துக்கெடும். (உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| வேனன்று | வேனன்மை | எனவரும். |
| பொருணன்றுபொருணன்மை | | |

கருங்கணன்று, கருங்கோணன்று எனத்தொடர்மொழியிறுதியிலே தனிக்குறிற்கீழ்நின்ற லளக்களுங் கெடுமெனவுங்கொள்க.

௯௱௰௯. லகர ளகரவீற்று மொழிகளின்முன் இடையினம்வரின் இருவழியிலும் இறுதி லளக்கள் இயல்பாம்.

(உ-ம்.)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| கல்யாது | கல்யாப்பு | எனவரும். |
| விரல்வலிது | விரல்வன்மை | |
| முள்யாது | முள்யாப்பு | |
| வாள்வலிது | வாள்வன்மை | |

இல்லென்கிற இன்மைப்பொருளை யுணர்த்துஞ்சொல் ஐகார ஆகாரச்சாரியைகளுளொன்றைப் பெற்றேனும்,இவ்விருசாரியைகளு ளொன்றையும் பெருமலேனும், நிற்கும். ஐகாரச்சாரியை பெற்றவிடத்த இல்லைபொருள் இல்லைப்பொருள் என வரும்வல்லினம் ஒருகாலியல்பாயும் ஒருகால்மிக்கும் வருமெனவும், ஆகாரச்சாரியை பெற்றவிடத்து இல்லாப்பொருள்என வரும்வல்லின மிகுமெனவும், இவ்

விருசாரியையும் பெறுதலிடத்து இல்பொருள் என இயல்பாமெனவுங்கொள்க.

[வகரவீறு.]

௩௱௰௭. அவ், இவ், உவ் என்னும் அஃறிணைப் பலவின்பாலையுணர்த்திவருஞ் சுட்டுப்பெயர்களி னிறுதி வகரம் அல்வழியில் வல்லினம்வரின் ஆய்தமாகத்திரியவும்,மெல்லினம்வரின் வந்தவெழுத்தாகத் திரியவும்,இடையினம் வரின் இயல்பாய் நிற்கவும்பெறும். (உ-ம்.)

அஃகடியன இஃசிறியன
உஃபெரியன ... } எ-ம்.

அஞ்ஞான்றன இந்நீண்டன
உம்மாண்டன ... } எ-ம்.

அவ்யாத்தன இவ்வளர்ந்தன
உவ்வாழ்ந்தன ...... } எ-ம், வரும்.

அன்றியுந் தெவ்வென்னுமொழியிறுதி வகரம் யகரமல்லாத மெய்கள் வருமிடத்துத்தெவ்வுக்கடிது, தெவ்வுக்கடுமை, என வுகரச்சாரியை பெறுமெனவும், மகரம்வருமிடத்து ஒரோவழித்தெம்மன்னரென மகரமாய்த்திரியப் பெறுமெனவும் அறிக.

---

மெய்யீற்றுப்புணரியல்-முற்றிற்று.

# பொதுப்புணரியல்.

---

௱௰௮. உயிரையு மெய்யையு மீறாகவுடைய வினைத் தொகைமுன் வரும் வல்லினம் இயல்பாம். (உ-ம்.)

| | | |
|---|---|---|
| விரிகதிர் | எறிபடை | எனவரும். |
| விடுகணை | ஓடுபாம்பு | |
| ஈட்டுதனம் | அறைகடல் | |
| உண்கலம் | கொல்களிறு | |
| செய்கடன் | சேர்புகழ் | |
| கோள்கலம் | தின்பண்டம் | |

இவற்றின்முன் விரிமலர், கொல்யானை என வருமெல்லினமும் இடையினமு மியல்பாமெனவும், ண ன ல ள இந்நான்கிற்றின்முன் வருந் தகரமு நகரமுந் திரியுமெனவுங்கொள்க.

௱௰௯. உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்களினீற்றமெய்கள் வல்லினம்வரின் இருவழியிலும் இயல்பாம். அப்பெயர்களினீற்ற உயிர்முன்னும் ய ச ர ழ க ர மெய்களின் முன்னும் வரும்வல்லினம் இருவழியிலு மிகாவாம்.

(உ-ம்.)

| அல்வழி | வேற்றுமை | |
|---|---|---|
| அவன்குறியன் | அவன்கை | எ-ம், |
| ஆண்சிறியன் | ஆண்செவி | |
| ஆண்பெரிது | ஆண்புறம் | |

விடலைதியன் விடலைதலை
அவர்தியர் அவர்தலை
சாத்திகுறியள் சாத்திகை
சாத்திபெரிது சாத்திபுறம்
தாய்தியள் தாய்தலை
தாய்பெரிது தாய்புறம் } எ-ம், வரும்.

௯௨௰. உயிரீற்று மெய்யீற்று விளிப்பெயர்முன் வரும்வல்லினம் பெரும்பாலு மியல்பாம். (உ-ம்.)

வேந்துகேள் சாத்தாசெல்
நங்காய்பார் தாய்தா
புலியேகொல் கிள்ளாய்போ } எனவரும்.

இவ்விளிப்பெயரின்முன் ஆடேக்கூறாய்,கோக்கூறாய்என ஒரோவிடத்து வரும்வல்லின மிகுமெனவும், வேந்துநில் தாய்வாஎன வருமெல்லினமும் இடையினமும் இயல்பா மெனவுங்கொள்க.

௯௨௧. உயிரையு மெய்யையும் ஈறாகவுடைய எண்ணுப்பெயர்முன்னும் நிறைப்பெயர்முன்னும் அளவுப்பெயர்முன்னும் அவ்வவற்றிற்குறைந்த அவ்வப்பெயர்கள் வரின் பெரும்பாலும் ஏ என்னுஞ்சாரியை இடையில்வரும்.

(உ-ம்.)

ஒன்றேகால் காலேகாணி எ-ம்,
தொடியேகஃசு கழஞ்சேகுன்றி எ-ம்,
கலனேபதக்கு உழக்கேயாழாக்கு எ-ம், } வரும்.

ஒன்றரை, தொடியரை, குறுணிநாழி, எனச் சிறுபான்மை ஏகாரச்சாரியை வாராதொழியுமெனவும் அறிக.

நாழி என்னும் அளவுப்பெயர்முன் உரி என்னும் அளவுப்பெயர்வரின் நாடுரி, என நிலைமொழி யீற்றுயிர்மெய்கெட்டு டகரமெய் தோன்றுமென்றும், உரி என்னும் அளவுப்பெயர்முன் ஏற்றமொழிகள்வரின் உரியவுப்பு, உரியபயறு என யகரவுயிர்மெய் வருமென்றுங்கொள்க.

௯௨௨. உயிரையு மெய்யையு முதலுமீறுமாகவுடைய வேற்றுமையுருபுகள், போனவிரண்டியலுள்ளும் இவ்வியலுள்ளும் வேற்றுமைப் பொருட்கெனக்கூறிய மெய்யுயிர் முதலீற்றுப்பெயர்களின் புணர்ச்சியைப் பெரும்பாலும் ஒத்து நிலைமொழியோடும் வருமொழியோடும் புணரும்.

நம்பிகண்வாழ்வு என உயிரீற்று உயர்திணைப்பெயர்முன் வேற்றுமையில் வரும்வல்லினமிகாவென்றும், ணகரம் இடையினம்வரின் இருவழியிலுமியல்பாமென்றும், விதித்தவாறு கண்ணுருபின் முதலுமீறு மியல்பாயின.

உறிக்கட்டயிர், என இகரவீற்றுச்சொன்முன் வேற்றுமைப்பொருளில் வரும்வல்லினமிகுமென்றும், ணகரம் வேற்றுமைப்பொருளில் வல்லினம்வரின் டகரமாய்த்திரியுமென்றும், விதித்தவாறு கண்ணுருபின் முதலுமீறும் விகாரமாயின.

சிறுபான்மை நம்பிக்கு என இகரவீற்று உயர்திணைப்பெயர்முன் வேற்றுமைப்பொருளில் வரும் வல்லினம்

இயல்பாமென்றவாறு இயல்பாகாமற் குவ்வுருபுமிகுதலு
க்கொள்க.

ருஉரு. உயிரீற்று மெய்யீற்று இடைச்சொற்களும்,
உரிச்சொற்களும், மேற்கூறிய புணர்ச்சிவிதிக்குச் சிறு
பான்மை வேறுபட்டும் வரும். (உ-ம்.)

வண்டின்கால், என வேற்றுமைப்பொருட் புணர்ச்
சியில் வல்லினம் வந்தவிடத்து சாரியை இடைச்சொல்லி
னிறுதி னகரந் திரியாமலியல்பாயிற்று.

செம்மதிபெரும, என இகரவீற்றிடைச் சொன்முன்
வரும்வல்லெழுத்து மிகாமலியல்பாயிற்று.

வரும்வல்லினம் மழகளிறு,நனிபேதை,கழிகண்ணோ
ட்டம், என அகரஇகரவீற்று உரிச்சொற்களின்முன் மிகா
மல் இயல்பாயும், தடந்தோள், எனஅரைவீற்றுரிச்சொன்
முன் இனமெல்லெழுத்து மிகப்பெற்றும் புணர்ந்தன.

ருஉச. விதியின்றி விகாரப்பட்டுவருவனவுஞ்சிலவு
ள,அவை மருவிவழங்குதல், ஒத்துநடத்தல், தோன்றல்,
திரிதல், கெடுதல் நீளல், நிலைமாறுதல், என எழுவகைப்ப
டும். மருவிவழங்குத லொன்றுந், தொடர்மொழியிலும்,
மற்றவை பெரும்பாலும் ஒருமொழியிலும்வரும்.

ருஉரு. மருவிவழங்குதல்விதியின்றிப் பலவாறுவி
காரப்பட்டு மருவிவரும். (உ-ம்.)

அருமருந்தன்னபிள்ளை என்பதுஅருமந்தபிள்ளை எ-ம்
கிழங்கன்னபழஞ்சோறு எ-து,கிழக்கம்பழஞ்சோறு எ-ம்

பாண்டியனுடென்பது பாண்டிநாடு எ-ம், தஞ்சாவூர் எ-து, தஞ்சை எ-ம், வடுகன்றந்தை எ-து, வடுகந்தை எ-ம், என்றந்தை எ-து, எந்தை எ-ம், ஆற்றூர் எ-து, ஆறை எ-ம், வடக்குள்ளது எ-து, வடாது எ-ம், வரும்.

௲௨௧. ஒத்துநடத்தல் ஓரெழுத்து நின்றவிடத்து மற்றோரெழுத்துவந்து பொருள்வேறுபடாது நடத்தலாம்

அவைவருமாறு.

அஃறிணையியற்பெயருள் குறிலிணையின்கீழ் மகரநின்றவிடத்து னகரம்வந்து பொருள்வேறுபடா தொத்துநடக்கும். (உ-ம்.)

அகம்-அகன், முகம், முகன் }
நிலம்-நிலன், நலம், நலன், } எனவரும்.

மொழிமுதலிடைகளிலே சகர ஞகர யகரங்களின் முன் அகரநின்ற விடத்து ஐகாரம்வந்து பொருள் வேறுபடாதொத்து நடக்கும். (உ-ம்.)

| | | |
|---|---|---|
| பசல் | பைசல் | எ-ம், |
| மஞ்சு | மைஞ்சு | |
| மயல் | மையல் | |
| அமச்சு | அமைச்சு | எ-ம், வரும். |
| இலஞ்சி | இலைஞ்சி | |
| அரயர் | அரையர் | |

ஒரோவிடத்து மொழிக்குமுதலிலுஞ் சிலவிடத்து ஐகா

ரத்தின்பின்னும் யகரவொற்றின் பின்னும் நகர நின்றவிடத்து ஞகரம்வந்து பொருள்வேறுபடா தொத்துநடக்கும்.

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| நண்டு | ஞண்டு | எ-ம், |
| நெண்டு | ஞெண்டு | |
| நமன் | ஞமன் | |
| ஐந்நூறு | ஐஞ்ஞூறு | எ ம்,வரும். |
| செய்ந்நின்ற | செய்ஞ்ஞின்ற | |

ஒரோவிடத்து அஃறிணைப் பெயரீற்றில் லகரமிருந்தவிடத்து ரகரம்வந்து பொருள் வேறுபடா தொத்துநடக்கும்.

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| சாம்பல் | சாம்பர் | எனவரும். |
| பந்தல் | பந்தர் | |
| குடல் | குடர் | |

அஃறிணைப்பெயர்களில் ஒரோவிடத்து மென்றொடர் குற்றுகரமொழிகளினிறுதி உகரநின்றவிடத்து அர் வந்து பொருள்வேறுபடா தொத்துநடக்கும். (உ-ம்.)

| | | |
|---|---|---|
| அரும்பு | அரும்பர் | எனவரும். |
| சுரும்பு | சுரும்பர் | |
| வண்டு | வண்டர் | |

௩உ௭. தோன்றலாவது எழுத்துஞ் சாரியையும் விதியின்றித் தோன்றுதலாம். (உ-ம்.)

யாது-யாவது என வகர வுயிர்மெய் தோன்றிற்று குன்று-குன்றம் என அம்முச்சாரியை தோன்றிற்று.செல்

உழி-செல்வழி, வின்ஊத்து-வின்வத்து, என மெய்யீற்றின்முன் உயிர்வர வகரமெய்தோன்றிற்று.

௱௨௮. திரிதலாவது ஓரெழுத்து மற்றோரெழுத்தாக விதியின்றித்திரிதலாம். (உ-ம்.)

மாசி மாசி எனக் சுகரஞ் சகரமாய்த்திரிந்தது மழைபெயின் விளையும்-மழை பெயில் விளையும் என னகரம் லகரமெய்யாய்த்திரிந்தது.

௱௨௯. கெடுதலாவது மெய்யாவது உயிராவது உயிர்மெய்யாவது விதியின்றிக்கெடுதலாம்.

யாடு-ஆடு, யானை - ஆனை என யகரமெய்கெட்டது யாவர்-யார் என வகரவுயிர்மெய் கெட்டது.

௱௩௰. நீளலாவது விதியின்றிக் குற்றெழுத்து நெட்டெழுத்தாக நீளலாம். (உ-ம்.)

பொழுது-போழ்து என ஒகரம் ஓகாரமாகவும், பெயர்-பேர் என எகரம் ஏகாரமாகவு நீண்டன.

௱௩௧. நிலைமாறுதலாவது எழுத்துகள் ஒன்று நின்றவிடத் தொன்றுசென்று மாறிநிற்றலாம். (உ-ம்.)

வைகாசி வைசாகி எ-ம், நாளிகேரம் நாரிகேளம் எ-ம், தசை சதை எ-ம், குமிறு மிகுறு எ-ம், சிவிறி விசிறி எ-ம், வரும்.

இவையன்றி, இலக்கணப்போலிமொழிகளும் விதியின்றி விகாரப்பட்டுவரும். (உ-ம்.)

இல்முன் என்பது முன்றில் எனமாறி னகரவீற்றின்

முன் விதியின்றி நகரந்தோன்றப்பெற்றது. பொது வில் என்பது பொதியில் எனமுற்றுகர வீற்றின்முன் விதியின்றி இகரமும் யகரமெய்யுந் தோன்றப்பெற்றது.

பொதுப்புணரியல் - முற்றிற்று.

௬-வது.

## வடவெழுத்துப்புணரியல்.

௱௩௨. வடவெழுத்துப்புணர்ச்சியாவது தமிழில் ஆங்காங்கு வந்து வழங்கும் வடமொழித் தொகைநிலைத் தொடர்களிலே நிலைமொழியும் வருமொழியும் வடநூற் புணர்ச்சி விதிப்படியேதோன்றல், திரிதல், கெடுதல் என்னும் விகாரங்களைப் பொருந்தியாவது, இயல்பாகவாவது இயைந்துநிற்றலாம்.

வடவெழுத்தென்பது வடமொழியெழுத்தாம்.

வடநூலார் தோன்றலை - ஆகமமென்றும், திரிதலை-ஆதேசமென்றும், கெடுதலை-லோபமென்றுங் கூறுவர்.

௱௩௩. வடவெழுத்துக ளிவையென்றும், வடமொழிகள் தற்சமமாகியுந் தற்பவமாகியுந் தமிழில்வந்து வழங்குமாறு இவ்வாறென்றும், உணர்ந்தன்றி வடவெழுத்துப்புணர்ச்சி உணரலாகாமையின், அவை இவையென முன்னருணர்த்தப்படும்.

வடவெழுத்துகளுள்

உயிரெழுத்துகள்

𑌅 𑌆 𑌇 𑌈 𑌉 𑌊 𑌋 𑍠 𑌌
𑍡 𑌏 𑌐 𑌓 𑌔 𑌅𑌂 𑌅𑌃 எனப்பதினைந்தாம்.

மெய்யெழுத்துகள்.

𑌕 𑌖 𑌗 𑌘 𑌙 𑌚 𑌛 𑌜 𑌝 𑌞
𑌟 𑌠 𑌡 𑌢 𑌣 𑌤 𑌥 𑌦 𑌧 𑌨 𑌪
𑌫 𑌬 𑌭 𑌮 𑌯 𑌰 𑌲 𑌵 𑌶 𑌷
𑌸 𑌹 𑌳 𑌕𑍍𑌷 ᳵ𑌕 ᳶ𑌪.

எனமுப்பத்தேழாம்.

வடநூலார் உயிரை - அச்சென்றும், மெய்யை-அல்லென்றுங் கூறுவர்.

௩௩௪. உயிரெழுத்துகள் பதினைந்தனுள், அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ, என்னும் பத்தும், மெய்யெழுத்துகள் முப்பத்தேழனுள் க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம, ய, ர, ல, வ, ள, என்னும் பதினைந்தும், ஆகிய இருபத்தைந்தும் ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொதுவெழுத்துகளாம்.

உயிரெழுத்துகளுள் அப்பத்தொழிந்த ஐந்தும், மெய்யெழுத்துகளுள் அப்பதினைந்தொழிந்த விருபத்திரண்டும், ஆகிய இருபத்தேழும் ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்துகளாம்.

௲௫. ஆரியத்திற்குந் தமிழிற்கும்பொதுவெழுத்தாலாகி விகாரமுறுமல் தமிழில்வந்து வழங்கும் வடமொழிகள் தற்சமமொழிகளெனப்படும். (உ-ம்)

| | | | |
|---|---|---|---|
| கமலம் | காரணம் | மணி | எனவரும். |
| வேணு | குங்குமம் | மேரு | |

௲௬. ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்தாலும் பொதுவுஞ் சிறப்புமாகிய ஈரெழுத்தாலுமாகித் திரிதன் முதலிய விகாரங்களைப்பெற்றுத் தமிழில்வந்து வழங்கும் வடமொழிகள் - தற்பவமொழிகளெனப்படும்.

அவைவருமாறு.

உயிர்களுள் மொழியிறுதி அகரம் உயர்திணையில்னகரமும், அஃறிணையில் மகரமும் பெறும். (உ-ம்.)

| | | |
|---|---|---|
| காமன் | எ-ம், | வரும். |
| கும்பம் | எ-ம், | |

மொழியிறுதி ஆகாரம் ஐகாரமாயும் ஈகாரம் இகரமாயுந்திரியும். (உ-ம்) மாலை எ-ம், புரி எ-ம், வரும்.

மொழியிறுதி ஊகாரம் உகரமாய்த்திரியும். (உ-ம்) சுயம்பு எனவரும்.

ஏழாமுயிர் இகரமாயும் இருவாயுந்திரியும். (உ-ம்) இடபம் எ-ம், மிருகம் எ-ம், வரும்.

மெய்யெழுத்துகளுள் க, ச, ட, த, ப, என்னும் ஐந்துவருக்கங்களினடுநின்ற மும்மூன்றெழுத்துகளும் அவ்வவ்வருக்கங்களின் முதலெழுத்துகளாகும். (உ-ம்)

நகம் நாகம் மேகம் எ-ம்,
சலவாதிவிசயம் சருச்சரை எ-ம்,
பீடம் பீடை திடம் எ-ம்,
தலம் தினம் தரை எ-ம்,
பலம் பந்தம் பாரம் எ-ம்,
} வரும்.

அன்றியும் எட்டாமெய் யகரமுமாகும். (உ-ம்) பங்கயம் எனவரும்.

பதினாறாமெய்யும் பதினெட்டாமெய்யும் றகரமாகும். (உ-ம்.) உற்பலம் எ-ம், அற்புதம் எ-ம், வரும்.

இருபதாமெய் மொழியிடையிற் பெரும்பாலும் னகரமாகும் (உ-ம்.) தினம் மனம் எனவரும்.

இருபத்தொன்று மெய்முதல் அவ்வருக்கத்து நான்கு மெய்களும் வகரமுமாகும். (உ-ம்.)

பாவம் எ-ம், கவம் எ-ம், வித்து எ-ம், வீமன் எ-ம், வரும்.

இருபத்தெட்டாமெய் றகரமாகும். (உ-ம்.) கற்பகம் எனவரும்.

இருபத்தொன்பதாமெய் ஒரோவிடத்துப் பகரமுமாகும். (உ-ம்.) காப்பியம், எனவரும்.

முப்பதாமெய் மொழிக்கு முதலிற் சகரமும், இடையிற் சகரமும் யகரமுமாகும். (உ-ம்.) சாலை எ-ம், பாசம், மயானம், எ-ம், வரும்.

முப்பத்தொன்றுமெய் மொழிக்குமுதலிற்சகரமும், இடையிலுங் கடையிலும் டகரமுமாகும். (உ-ம்.) சண்முகம் எ-ம், விடம் எ-ம், பாடை எ-ம், வரும்.

முப்பத்திரண்டாமெய் மொழிக்குமுதலிற் சகரமும், இடையிற்சகரமுந் தகரமுமாகும். (உ-ம்) சித்தி எ-ம், வாசம், வாதனை எ-ம், வரும்.

முப்பத்து மூன்றுமெய் மொழிக்கு முதலிற்கெடும் இடையிலுங் கடையிலுங் ககரமாகத்திரியும். (உ-ம்) அரன் எ-ம், மோகம் எ-ம், அகி எ-ம், வரும்.

முப்பத்தைந்தாமெய் மொழிக்குமுதலி லொருககரமும், இடையிலுங் கடையிலு மிருககரமுமாகும் (உ-ம்.) கேரம் எ-ம், பக்கம் எ-ம், குக்கி எ-ம், வரும்.

வடமொழிகளுள் இரண்டு மெய்களிணைந்து ஓரெழுத்துப்போல வருமிடத்து நகர யகர ரகர லகரங்களுக்கு முன்னின்றமெய்கள், மொழிக்குமுதலிலும் இடையிலும் இகரம்பெறும். (உ-ம்)

| முதல் | இடை | |
|---|---|---|
| சினேகம் | விக்கினம் | |
| தியாகம் | வாக்கியம் | எனவரும். |
| திரவியம் | வக்கிரம் | |
| கிலேசம் | சுக்கிலம் | |

இணைந்துநிற்கு மகர வகரங்களுக்கு முன்னின்றமெய்கள், மொழிக்குமுதலிலும் இடையிலும் உகரம்பெறும்.

(உ-ம்.)

| முதல். | இடை. | |
|---|---|---|
| சுமார்த்தன் | பதுமம் | எனவரும். |
| துவசம் | பக்குவம் | |

மொழிக்கிடையில் ந ய ர ல வக்களுக்கு முன்னின்ற மெய்கள், பெரும்பாலும் இரட்டித்துவரும். அவை யிரட்டித்துவருதல்-மேற்காட்டிய வுதாரணங்களிற் கண்டுகொள்க.

இனைந்துநிற்கு நகரத்திற்கு முன்னின்றமெய் அகரம்பெறும். (உ-ம்.) அரதநம் எனவரும்.

தனிக்குறிலின்கீழ்நின்ற ரகரம் பின்னின்ற மெய்களோடு இணைந்துநிற்கும்போது உகரம்பெறும். (எ-ம்.) அருச்சன், கருப்பம் எனவரும். பிறவுமன்ன.

ஞகர யகர ரகர லகர வகர மகரங்களல்லாத மெய்களுக்கு முன்னின்றமெய்கள், பெரும்பாலுங்கெடும். (உ-ம்) ஞானம், தானம் எனவரும். மற்றவைகளுமிப்படியே.

மொழிக்கீற்றி னிற்குங் ககரமுதலிய வல்லினமெய்கள், இரட்டித்து உகரம்பெறும். (உ-ம்.) வாக்கு, விராட்டு எனவரும்.

மேலுஞ் சம்பகம், எ-து, சண்பகம் எ-ம், கோகந்தம் எ-து கோகநகம் எ-ம், தபநீயம் எ-து தமனியம் எ-ம், ரூபம் எ-து உருவம், உருவு, உரு எ-ம், ஆத்மா எ-து

ஆன்மா எ-ம் தர்மம் எ-து தன்மம் எ-ம், அஸ்தம் எ-து அத்தம் எ-ம் சப்தம் எ-து சத்தம் எ-ம் சக்தி எ-து சத்தி எ-ம் மோக்ஷம் எ-து மோக்கம் என வருதலன்றி- மோட்சம் எ-ம், பத்மம் எ-து பதுமம் எனவருதலன்றி- பற்பம் எ-ம், பலவாறு விகாரப்பட்டு வருதலுங்கொள்க.

௫௫௭. வடசொற்களுக்கு முதலாகி வருகின்ற ரகர லகர யகரங்களில் ரகரம் அகர இகர உகரங்களிலொன்றையும், லகரம்- இகரஉகரங்களிலொன்றையும், யகரம் இகரத்தையும், முதலிற்பெற்று வரும்.

(உ-ம்)

அரங்கம், இராமன், உரோமம் எ-ம்,
இலர்பம், உலோபம், எ-ம்,
இயக்கன், ........... எ-ம், வரும்.

௫௫௮. தமிழில் ஆங்காங்குவந்து வழங்கும் வடமொழுத் தொகைநிலைத்தொடர்களிலே பெரும்பாலும்வடநூற்புணர்ச்சி விதிப்படியே வருஞ்சந்திகள் - தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்தி, என மூன்றுவகைப்படும். இம்மூன்று சந்திகளும் வருதல் உயிரீற்றின்முன் உயிர்வருமிடத்தெனவறிக.

௫௫௯. அம்மூன்றுசந்திகளிலே தீர்க்கசந்தியாவன- அ ஆக்களி லொன்றன்முன் அ ஆக்களி லொன்றுவந்தால், நிலைமொழியீறும் வருமொழி முதலுங்கெட ஒராகாரமும், இ ஈக்களி லொன்றன்முன் இ ஈக்களிலொன்றுவந்

முன்னிரைவந்தது இது போல்வன கலித்தளையாம். பிற வுமன்ன.

௰௮. அடி—மேற்சொல்லப்பட்ட தளைகளொன்றும் பலவுமடுத்துவருவதாம்.

௰௯. அவ்வடி—குறளடி-சிந்தடி - அளவடி-நெடில டி - கழிநெடிலடி-என வைந்துவகைப்படும்.

௨௰. இருசீரான்வருவன குறளடி எனவும் முச்சீரா ன்வருவன சிந்தடிஎனவும், நாற்சீரான்வருவன-அளவடி- அல்லது நேரடி எனவும், ஐஞ்சீரான்வருவன நெடிலடி எ னவும், ஐந்தின்மேற்பட்டசீரான் வருவனவெல்லாங் கழி நெடிலடிஎனவும்படும். இவற்றிற்கிலக்கியம் பின்பாவு மி னமுங்கூறும்வழிக்காண்க.

௨௧. தொடை பலவடிகளிலேனும் பலசீர்களிலேனு மெழுத்துகளொன்றிவரத் தொடுப்பனவாம்.

௨௨. அத்தொடை எதுகைத்தொடையு மோனைத் தொடையு மெனவிருவகைப்படும்.

௨௩. எதுகைத்தொடை—அடிதோறு முதலெழுத்த ளவொத்துநிற்ப விரண்டாமெழுத்தொன்றிவரத்தொடுக் கப்படுவனவாம்.—உம்.துகடீர்பெருஞ்செல்வந் தோன்றி யக்காற்றொட்டுப்-பகடுநடந்தகூழ் பல்லாரோடுண்க-வக டுறயார்மாட்டுநில்லாதுசெல்வஞ் - சகடக்கால்போலவரு ம். இவ்வின்னிசைவெண்பாவினு ளிரண்டாமெழுத் தொ

ன்றிவருதல்காண்க.—அன்றியுஞ்சொற்போர்புரிவர் நான்மறையாறங்கமுணர்ந்தொழுகுலத்தோர் - விற்போர்புரிவர்நெடியசிலையி ராமனனையவிறல்வேந்தர்.-பொற்போர்புரிவர் பிறர்பொருளுந்தமபோற் பேணிப்புரிவணிகர்-நெற்போர்புரிவரங்ககரில் வேளாண்குலத்து நெறியினரோ என அதனோடு மூன்றுமெழுத்து முதலியன வொத்துவருதலுங்கொள்க.

ஒரோவிடத்தோரடியுள்ளுஞ்சீர்களி னிரண்டாமெழுத்தொன்றி-பொன்னி-னன்னபொறிசுணங்கேந்தி-எனவருதலுமுண்டு.—சிறுபான்மை வருக்கவெழுத்தும் - நெட்டெழுத்தும்-இனவெழுத்தும் - பிறவுமெதுகையாகவரவும் பெறும்.—உம். வானின்றுலகம்வழங்கிவருதலாற்-றானமிழ்தமென்றுணரற்பாற்று - இது வருக்கவெதுகை.—ஆவாவென்றேயஞ்சினராழ்ந்தாரொருசாரார் - கூகூவென்றே கூவிளிகொண்டா ரொருசாரார்-இது நெடிலெதுகை.—தக்கார்தகவிலரென்பதவரவ - ரெச்சத்தாற்காணப்படும்- இது வல்லினவெதுகை.

௨௪. மோனைத்தொடை-முதற்சீரின்முதலெழுத்தோடுபின்வருஞ்சீர்களி லொன்றனுள்ளேனும் பலவற்றினுள்ளேனு முதலெழுத்தொன்றிவரத் தொடுக்கப்படுவனவாம்.—உம். சற்றளகல்வியுந்திருவுமாற்றலுந் - சற்றெறுமறலியைத் தடுப்பவல்லவா-முற்றெருங்குணர்பசுபதியைமுன்னுறு-அற்றனாளொழித்திடு முணர்விலிக்கரோ. இச்செய்யுளில்-முதலடியில்சகரமும்.இரண்டாமடியில்-தகரமும்.

மூன்றுமடியில்-முகரமும். நாலாமடியில்-உகரமும். அன்றியொகரமு மோனையாகவந்தன.

அன்றியும். அ-ஆ-ஐ-ஔ-என்னுமிந்நான்கு மொன்றற்கொன்று மோனையாம். இ-ஈ-எ-ஏ என்னுமிந்நான்கு மொன்றற்கொன்று மோனையாம். உ-ஊ-ஒ-ஓ-என்னுமிந்நான்கு மொன்றற்கொன்றுமோனையாம். ஞ ந வும்-ச த வும்-ம வ வும்-ஒன்றற்கொன்று மோனையாம்.—உம். அடல்வேண்டுமைந்தின்புலத்தை விடல்வேண்டும் வேண்டியதெல்லாமொருங்கு-இதன்முதலடியில்-அகரத்திற்கு ஐகாரமோனையாயிற்று. பிறவுமன்ன - மோனை-அனு - என்பனவொருபொருள்.

உரு. எதுகைமோனையின்றிவரும்பாட்டுமுண்டு.—உம். பூத்தவேங்கைவியன்சினையேறி- மயிலினமகவுநாடன்னுதற்கொடிச்சி மனத்தகத்தோனே-எனவரும். இவ்வணம்வருவது செந்தொடைஎனப்படும்.

உசு. பாவென்பன இரண்டுமுதலிய வடிகளாலாக்கப்பட்டுவருவனவாம்.

உஎ. அப்பாக்கள்—வெண்பாவும்-அகவற்பாவும்-கலிப்பாவும்-வஞ்சிப்பாவும் - எனநான்காம். அந்நான்கனோடு மருட்பா-னூற்பா-வென்னு மிரண்டுங்கூடி யாறெனவும்படும். இவற்றுள்-முதனான்குமே சிறப்புடையவாம்.

உஅ. அப்பாவினங்கள் தாழிசை துறை விருத்தமென மூன்றும்இவைஅவ்வெண்பாமுதலிய நான்கினுள்ஒவ்வொன்றிற்கு மினங்களாய் வரும்.

உக. வெண்பா ஈற்றடிமுச்சீரடியாகவும் - ஏனையடிகள் நாற்சீரடிகளாகவும் வரப்பெற்றுக் காய்ச்சீருமவற்சீரும் வெண்சீர்வெண்டளையு மியற்சீர்வெண்டளையுங்கொண்டு-மற்றையச்சீருந் தளையும்பெறாது-காசு-பிறப்பு-நாள் மலர்-என்னும் வாய்பாட்டினுள் ஒன்றான்முடிவுபெற்றுவரும்.

உ௰. அவ்வெண்பா-குறள்வெண்பா- நேரிசைவெண்பா-இன்னிசைவெண்பா-சிந்தியல்வெண்பா- பஃறொடைவெண்பா-எனவைந்துவகைப்படும்.

உஙா. குறள்வெண்பா இரண்டடியாய் - ஒருவிகற்பத்தாலேனும் - இருவிகற்பத்தாலேனும் வருவனவாம்.—உம். உடையார்முன்னில்லார்போலேக் கற்றாங்கற்றார் கடையரேகல்லாதவர். இதுஒருவிகற்பக்குறள்வெண்பா - மலரொனமுடிந்தது.—கண்ணுதல்காட்சி கிடைத்தவிழிக்கில்லை வெல்கூற்றின்றோற்றங்கொளல். இது-இருவிகற்பக்குறள் வெண்பா.

உ௨. நேரிசைவெண்பா நான்கடியாயிரண்டாமடியிறுதிச்சீர் முதற்றொடைக்கேற்ற தனிச்சொல்லாய்வர வடிமுழுதமோனைதகையாகவேனும்-முன்னிரண்டுமோனைதகையும் பின்னிரண்டு மற்றொரு தகையுமாகவேனும்வருவனவாம்.—உம். கூற்றங்குமைத்த குனாகழற்காற்கும் பிட்டுத்தோற்றந்துடைத்தேன் றுடைத்தேமாற் - சிற்றஞ்செய்-யேற்றினுன்றில்லை யிடத்திருனென்னினியாம்-போற்றினுனல்கும்பொருள். இது ஒருவிகற்பநேரிசைவெண்

பா மலவொன்றும் வாய்பாட்டான்முடிந்தது.—எற்குன்பு ள்ளூர்ந்தானெயிலெரித்தான்மார்பிடந்தா-னீற்றானிழன்ம ணிவண்ணத்தான் - கூற்றெருபான்-மங்கையான் பூமக ளான்வார்சடையா னீண்முடியான் - கங்கையா னிளகழ லான் காப்பு. இது இருவிகற்பநேரிசைவெண்பா - காசு- என்னும் வாய்பாட்டான்முடிந்தது.

௩௩. இன்னிசைவெண்பா—ஒருவிகற்பத்தாலேனும் பலவிகற்பத்தாலேனு நான்கடியாய்த் தனிச்சொல்லின்றி வருவனவாம்.—உ ம். துகடீர்பெருஞ்செல்வந் தோன்றிய க்காற்றொட்டுப்-பகடுநடந்தகூழ்பல்லாரோடுண்க-வகடுற யார்மாட்டுநில்லாதுசெல்வஞ்-சகடக்காற்போலவரும் இ துதனிச்சொல்லின்றி யொருவிகற்பத்தான்வந்த வின்னி சைவெண்பா.—கடற்குட்டம்போழ்வர் கலவர்படைக்கு ட்டம்-பாய்மாவுடையானுடைக்கிற்குந் தோமிறவக்குட் டந்தன்றுடையானீந்து மவைக்குட்டங் - கற்றான்கடந்து விடும். இது தனிச்சொல்லின்றிப் பலவிகற்பத்தான்வந்த வின்னிசைவெண்பா.

அன்றியும்-மழையின்றிமாநிலத்தார்க்கில்லை-மழையு ந்-தவமிலாரில்வழியில்லைத்-தவமு-மரசிலாரில்வழியில்லை யரசனு-மில்வாழ்வாரில்வழியில் - எனவடிதோறுந்தனிச் சொற்பெற்றுவருவதும்.—காதன்மகளிர் கலக்கக்கலக்கு ண்டு-பேதுற்றார்நெஞ்சும் பிழைத்தகன்றானெஞ்சம்-போதம்படரும்புலியூரோ - தா துண்டு- வண்டுறங்குபூஞ்ச டையோன்வைப்பு. எனமூன்றமடியினிறுதிதனிச்சொற்

பெற்றுவருவதும்.—அங்கண்விசும்பி னகனிலாப்பாரிக்கு
ந்-திங்களுஞ்சான்றோருமொப்பர்மற்-றிங்கண் - மறுவாற்
றுஞ்சான்றோரஃதாற்றார்தெருமந்து-தேய்வரொருமாசுறி
ன் - எனவிரண்டாமடியினிறுதி தனிச்சொற்பெற்று மூன்
றுவிகற்பத்தான்வருவதும் - பிறவாறுநேரிசை வெண்பா
விற்சிறிதுவேறுபட்டுவருவனவுமின்னிசைவெண்பாவாம்.

௩௪. சிந்தியல்வெண்பா—விருவகைப்படும்.அவற்று
ள்-மூன்றடியாய் நேரிசைவெண்பாவைப்போல வருவன
நேரிசைச்சிந்தியல்வெண்பாவும்-மூன்றடியாய்இன்னிசை
வெண்பாவைப்போல வருவன இன்னிசைச்சிந்தியல்வெ
ண்பாவுமாம். உ-ம். அறிந்தானையேற்றியறிவாங்கறிந்து-
செறிந்தார்க்குச்செவ்வனுரைப்பச்-சிறந்தார் - சிறந்தமை
யாராய்ந்துகொண்டு-இதுபோல்வன நேரிசைச்சிந்தியல்
வெண்பா.—போற்றுமின்போற்றுமின் போற்றுமின்போ
ற்றுமின்-கூற்றங்குமைக்க வருமுன்னமரங்கா-ளேற்றுக
ந்தான்பொற்றாளிணை.இதுபோல்வன இன்னிசைச்சிந்திய
ல்வெண்பா.

௩௫. பஃறொடைவெண்பா—நான்கடியின்மிக்க பல
வடிகளைப்பெற்றுவருவனவாம்.—உ-ம். வையகமெல்லாங்
கழனியாய்வையகத்துட்-செய்யகமேநாற்றிசையின்றேய
ங்கள் செய்யகத்துள்-வான்கரும்பேதொண்டை வளநா
( வான்கரும்பின்-சாறேயந்நாட்டிற் றலையூர்கள்சாறட்ட-
கட்டியேகச்சிப் புறமெல்லாங்கட்டியுட்-டானேற்றமான

சருக்கரைமாமணியே-யானேற்றுன்கச்சியகம். இது ஏழடிப்பலவிகற்பப் பஃறொடைவெண்பா.

௩௬. குறள்வெண்செந்துறை குறட்டாழிசை எனக் குறள்வெண்பா இனமிரண்டாம்-அவ்விரண்டனுள்.

௩௭. குறள்வெண்செந்துறை—விழுமியபொருளு மொழுகியவோசையு முடையதாகி யெனைத்துச்சீரானு மளவொத்தவிரண்டடியாய் வருவனவாம்.—உம். ஆர்கலி யுலகத்துமக்கட்கெல்லா - மோதலிற்சிறந்தன்றொழுக்கமுடைமை.

௩௮. குறட்டாழிசை நாற்சீரின்மிக்கபலசீரான்வருமடியிரண்டா யீற்றடிகுறைந்துவருவனவும் - விழுமியபொருளுமொழுகியவோசையுமின்றிக் குறள்வெண்செந்துறையிற் சிதைந்துவருவனவும்-வேற்றுத்தளைவிரவியகுறள்வெண்பாவுமென மூன்றுவகைப்பட்டு வருவனவாம். உம், நண்ணுவார்வினைகைபடாடொறு நற்றவர்க்கரசாய ஞானநற்-கண்ணினுனடியேயடைவார்கள்கற்றவரே.எம். அறுவர்க்கறுவரைப் பெற்றுங் கவுந்தி - மறுவறுபத்தினி போலவையிரே-எம். வண்டார்பூங்கோதை வரிவளைக்கைத்திருநுதலாள்-பண்டையளல்லள்படி-எம். வரும்.

௩௯. வெண்டாழிசை வெண்டுறை வெளிவிருத்தம் என்னும் வெண்பாவினமூன்றனுள் வெண்டாழிசை மூன்றடியாய் முதலிரண்டடியு நாற்சீராயும்-ஈற்றடியொன்று

ம் வெண்பாவைப்போல முச்சீராயும் வேற்றுத்தளைவிரவியும் வருவனவும் - சிந்தியல்வெண்பா வொருபொருண்மேல்-மூன்றடுக்கிவருவனவுமென விருவகைப்பட்டுவருவனவாம்.—உம். நண்பிதென்றுதீயசொல்லார் - முன்புநின்றமுனிவுசெய்யா-ரன்புவேண்டுபவர். இது மூன்றடியால்வந்த வெண்டாழிசை.—அம்பேருண் கண்ணார்க்கழிந்தமடநெஞ்சே-கொம்பேறுடையான் கழலிறைஞ்சாதென்கொலியாம்-வம்பேபிறந்தவிடல். வாணேருண் கண்ணார்க்கழிந்தமடநெஞ்சே - நீறுகம்பூண்டான் கழலிறைஞ்சாதென்கொலியாம்-வினைபிறந்தவிடல். கோளாருண் கண்ணார்க்கழிந்தமடநெஞ்சே-யாளாகவாண்டான் கழலிறைஞ்சாதென்கொலியாம்-வாளாபிறந்தவிடல். இது சிந்தியல்வெண்பா வொருபொருண்மேன் மூன்றடுக்கிவந்த வெள்ளைத்தாழிசை.

சஓ. வெண்டுறை—மூன்றடிமுதலேழடி யீறுகப்பின்புநின்ற சிலவடிகளிற் சிலசீர்குறைந்தவருவனவாம். இவற்றுளெல்லாவடியுமோரோசையாய் வருவனவன்றியு முன்பிற்சில வடிகளோரோசையாயும் பின்பிற்சிலவடிகண் மற்றோரோசையாயும் வருதலுமுண்டு.—உம். படர்தருவெவ்வினைத்தொடர்பாற் பவத்தொடரரப்பவத் தொடர்பாற் படராகிற்கும் - விடலரும்வெவ்வினைத்தொடர் பவ்வினைத்தொடர்புக் கழிவுண்டோ வினையேற்கம்மா-விடர்பெரிதுமுடையேன் மற்றென்செய்கே னென்செய்கே-னரவமரைக்கசைத்த வடிகேளோவடிகேளோ. இது நான்க

டியாய்ப்பின்னிரண்டு மிருசீர்குறைந்துவந்த வேறொலி வெண்டுறை.—கூற்றிருக்குமடலாழிக் குரிசின்முதலோ ரிறைஞ்சக்கொழுந்தேன்பில்கி-யூற்றிருக்குந்தில்லை வனத் தசும்பிருக்கும் பசும்பொன்மன்றத்தொருதாளுன்றி - வ ளவுபாடச்சுடர்மகுடமாடப்பிறைத்-தண்டமாடப்புலித் தோலுமாடப்பகி-ரண்டமாடக்குலைந் தகிலமாடக்கருங்- கொண்டலோடுங்குழற் கோதையோடுங்கறைக் - கண்ட னுடுந்திறங்காண்மினோகாண்மினோ. இது ஏழடியாய் முத லிரண்டடியுமோரோசையா யேனையடிகள் வேறோசை யாய்வந்த வேற்றொலிவெண்டுறை.

சக. வெளிவிருத்தம் மூன்றடியினாலேனு நான்க டியினாலேனு முற்றுப்பெற்று அடிதோறு மிறுதியிலொரு சொல்லையே தனிச்சொல்லாகக்கொண்டு வருவனவாம். உம். அங்கட்கமலத்தலர்கமலமேயிரு-நீரோபோலும். வெ ங்கட்சுடிகைவிடவரவின்மேயிரு-நீரோபோலுந். திங்கட்ச டையீருந் தில்லைவனத்துள்ளீரோ-நீரோபோலும். இது மூ ன்றடியால்வந்த வெளிவிருத்தம்.—ஆவாவென்றே யஞ்சி னராழ்ந்தா-ரொருசாரார். கூகூவென்றே கூவிளிகொண் டா-ரொருசாரார். மாமாவென்றேமாய்ந்தனர்நீந்தா-ரொ ருசாரா. ரேகீர்நாகீரொன்செய்து மென்றாரொருசாரார். இது நான்கடியால்வந்த வெளிவிருத்தம்.

சஉ. அகவற்பா நாற்சீரான்வருமளவடியவாகியுமி யற்சீர்பயின்றும் அயற்சீர்விரவியுந் தன்றளைதழுவியும்பிற தளைமயங்கியுங்-கருவிளங்கனிகூவிளங்கனியென்னுமிருசீ

ருங்கலவாது மூன்றுமுதலியபலவடிகளால் வருவனவாம்.

சரு. அவ்வகவற்பா நேரிசை யாசிரியப்பா-இணைக்கு றளாசிரியப்பா-நிலைமண்டிலவாசிரியப்பா-அடிமறிமண்டி லவாசிரியப்பா-என நான்குவகைப்படும். அகவல் ஆசிரிய ம் ஒருபொருட்சொற்கள்.

சச. அந்நான்கனுள் நேரிசை யாசிரியப்பா - ஈற்றய லடி முச்சீரடியும்-மற்றையடிகளெல்லாம் நாற்சீரடிகளு மாக வரப்பெறும்.—உம்.பெருந்துறைபுகுந்தபேரின்பவெ ள்ள-மூழ்கியபுனிதன் மொழிந்தவாசகமே- வாசகமதற்கு வாச்சியந்-தூசகலல்குல்வேய்த்தோளிடத்தவனே- எனவ ரும்.

சடு. இணைக்குறளாசிரியப்பா - ஈற்றடியுமுதலடியு மொத்து நடுவடிகளி லொன்றும் பலவுமொருசீரும்பலசீ ருங்குறைந்தவருவனவாம்.—உம். நீரின்றண்மையுந் தீ யின்வெம்மையுஞ்-சாரச்சார்ந்து-தீரத்தீருஞ்- சாரனுடன் கேண்மை-சாரச்சாரச்சார்ந்து-தீரத்தீரத்தீர்பொல்லாதே- எனவரும்.

சசு. நிலைமண்டிலவாசிரியப்பா எல்லாவடியு மள வொத்த நாற்சீரடிகளாகவருவனவாம்.—உம். வேரல்வே லிவேர்க்கோட்பலவின்-சாரனாடசெவ்வியையாகுமதி-யா ரஃதறிந்திசினோரே-சாரற்-சிறுகோட்டுப்பெரும்பழந் தூங் கியாங்கிவ ளுயிர்தவச்சிறிதுகாமமோபெரிதே-எனவரும்.

௪௭. அடிமறிமண்டிலவாசிரியப்பா எல்லாவடியுமள வொத்து - எவ்வடியைமுதனடுவிறுதியாகவுச்சரித்தாலு மோசையும்பொருளும்வழுவாதுவருவனவாம்.—உம். தீர்த்தமென்பதுசிவகங்கைய்யே-யேத்தருர்தலமெழிற்புலியூரே-மூர்த்தியம்பலக்கூத்தனதுருவே-எனவரும்.

௪௮. ஆசிரியத்தாழிசை ஆசிரியத்துறை ஆசிரியவிருத்தமென்னும் அகவற்பாவின மூன்றனுள்-ஆசிரியத்தாழிசை எனைத்துச்சீரானுந்தம்முளளவொத்தமூன்றடியவாய்த்தனித்தேனும்-ஒருபொருண்மேன்மூன்றடுக்கியேனும் வருவனவாம்.—உம். சத்தமுமாகியச் சத்தத்தாற்பெறு-மத்தமுமாகலினனந்தன்கண்களே-யுத்தமனெழுத்துருவங்காண்பன. இதுதனித்துவந்தஆசிரியத்தாழிசை—கன்றுகுணிலாக்கனியுகுத்தமாயவ-னின்றுநம்மானுள்வருமேலவன்வாயிற்-கொன்றையந்தீங்குழல் கேளாமோதோழீ. பாம்புகயிறுக்கடல் கடைந்தமாயவ-னீங்குநம்மானுள்வருமேலவன்வாயி லாம்பலந்தீங்குழல் கேளாமோதோழீ. சொல்லையஞ்சாரற் குருந்தொசித்தமாயவ-னெல்விநம்மானுள்வருமேலவன்வாயின்-முல்லையந்தீங்குழல்கேளாமோதோழீ.இது ஒருபொருண்மேன்மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை.

௪௯. ஆசிரியத்துறை எனைத்துச்சீரானும் வருமடிநான்குடையவாயீற்றயலடிகுறைந்தேனும்-முதலடியுமூன்றுமடியுங்குறைந்தேனும்வரும். அவ்வாறுவருமிடத்துஇடைமடக்கியுமடக்காதும்வரும்.—உம். கரைபொருகானியாற்றங் கல்லதரொம்முள்ளி வருவிராயி-னரையிருள்யாமத்தடி

புலியேறஞ்சியகன்றுபோக-நனாயுருமேறு நங்கைவேலஞ்சுநம்மை வரையாமங்கையர்வெளவுத லஞ்சுதும்வாரலையோ. இதுநான்கடியாயீற்றயலடிகுறைந்துவந்தவாசிரியத்துறை—இரங்குகுயின்முழவா வின்னிசையாழ்தேனு-வரங்கமணிபொழிலாவாடும்போலுமிளவேனி-லரங்கமணிபொழிலாவாடுமோயின்-மரங்கொன்மணந்தகன்றார் நெஞ்சமென்செய்ததிளவேனில். இது நான்கடியதாயிடையிடைகுறைந்திடைமடக்காய்வந்த ஆசிரியத்துறை.

௫௰. ஆசிரியவிருத்தம் அளவொத்த கழிநெடிலடி நான்கினுல் வரும்.

உம். விடஞ்சூழரவினிடைநுடங்கமின்வாள்வீசிவிளையார்வேங்-கடஞ்சூழ்நாடன்காளிங்கன்கதிர்வேல்பாடுமாதங்கி-வடஞ்சேர்கொங்கைமலைதாந்தாம்வடிக்கண்ணிலமலர்தாந்தாந்-தடந்தோளிரண்டும் வேய்தாந்தாமென்னுந்தன்னைத்தன்னுமையே. இது அறுசீர்க்கழிநெடிலடியால்வந்த ஆசிரியவிருத்தம்.—கோமுனிவருக்குமரிதாய் முதுமறைப்பனுவல்கூறியபரப்பிரமமா-மோமெனுமெழுத்தின்வடிவாய்நடநவிற்றுபுலியூரன்மகுடச்சடிலமேன்-மாமதியினைத்தனதுகோடெனவெடுப்பமதமாமுகன்முகக்கைதொடவத்-தூமதிபணிப்பகையெனு வரநதிப்புகவோர்தோணியென விட்டகலுமே. இது எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்—அருவருக்கு முலகவாழ் வடங்கநீத்தோர்க்கானந்தப்பெருவாழ்வாமாடல்காட்ட - மருவருக்கன்மதிவளிவான்யமானன்றீர் மண்ணெனுமெண்வகையுருப்பின்

வடிவுகொண்ட - வொருவனுக்குமொருத்திக்கு முருவொ
ன்ற லவ்வுருவை யிஃதொருத்தனென்கோவொருத்தியெ
ன்கோ - விருவருக்குமுரித்தாக வொருவனென்றோரியற்
சொலிலதெனின்யான் மற்றென்சொல்கேனே. இது எண்
சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.—வளங்குலாவரு ம
ணங்கனூர்விழிமயக்கிலேமுலைமுயக்கிலே விழுமார்தர்கா
ள்-களங்குலாமுடலிறந்துபோயிடுகோடுசேர்முனம்வீடுசே
ர் வகைக்கேண்மினோ-துளங்குநீள்கழ றழங்கவாடல்செய்
சோதியா னணிபூதியானுமைபாதியான்-விளங்குசேவடியு
ளங்கொளீரொமன் விடுத்தபாசமுமடுத்தபாசமும் விலக்கு
மே. இதுஒன்பதின்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.—
கைத்தலத்தழற்கணிச்சி வைத்திடப்புறத்தொருத்தி கட்க
டைப்படைக்கிளைத்த திறலோரா - முத்தலைப்படைக்கரத்
தெமத்தர்சிற்சபைக்குனிற்கு முக்கணைக்கருக்கொருத்தர்
மொழியாரோ - நித்திலத்தினைப்பதித்தகச்சறுத்தடிக்கன
த்து நிற்குமற்புதத்தனத்தினிடையேவே - எத்திரத்தினிற்
றொடுத்துவிட்டெட்டயிற்கணித்திலக்கனுற்றிடச்செய்விக்
குமதுதானே. இது ஒன்பதின்மிக்கசீர்க்கழிநெடிலடியாசி
ரியவிருத்தம்.

௫௧. கலிப்பா—வெண்சீர்மிகப்பெற்றுமாச்சீரும்விள
ங்கனிச்சீரும்பெருதபிறசீர்களுஞ் சிறுபான்மைகலந்து க
லித்தளையுமபற்றளையுந்தழுவி-தரவு-தாழிசை-அராகம்-அம்
போதரங்கம்-தனிச்சொல்-சுரிதகம். என்னு மாறுறுப்பினு
ளேற்பனபெற்று நாற்சீரடியால்வருவனவாம்.

சிறுபான்மை யவற்றி னுறுப்புகளிற் சிலகுறளடியா லும் சிந்தடியாலும் வரப்பெறும்.

௬௨. அக்கலிப்பா ஒத்தாழிசைக்கலிப்பா வெண்கலி ப்பா கொச்சகக்கலிப்பாவென மூன்றுவகைப்படும்.

௬௩. அம்மூன்றனுள் ஒத்தாழிசைக்கலிப்பா-வண்ண கவொத்தாழிசைக்கலிப்பா - அம்போதரங்க வொத்தாழி சைக்கலிப்பா - நேரிசையொத்தாழிசைக்கலிப்பா- எனமூ ன்றுவகைப்படும்.—அவற்றுள் வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா-ஒருதரவு-மூன்றுதாழிசை-அராகம்-அம்போதரங் கம்-தனிச்சொல்-சுரிதகம் என்றுமிவ்வாறுறுப்பு மொன்ற ன்பின்னொன்றுறக்கொண்டுவரும் அராகமெனினும்வண்ணக மெனினுமொக்கும்.அசையடியெனினும்-அம்போதரங்கமெ னினுமொக்கும்.—அராகவுறுப்பானது அளவடிமுதலெல் லாவடிகளாலு நான்கடிமுதலெட்டடியளவாகவரவும்பெ றும்.—அம்போதரங்கவுறுப்பானது - நாற்சீரடியாகிய ஈர டியாலிரண்டும்-ஓரடியானொன்றும். முச்சீரடியாலெட்டும்- இருசீரடியாற்பதினாறுமாகவரும். சிறுபான்மைமுச்சீரடி நான்கும்-இருசீரடியெட்டுமாகவும்வரும்.—உம். தொல்லு ஸ்கம்படுசுடிகைச் சுடர்மணிவிளக்கேர்தும்-பல்பொறிய படவரவுமடுபுலியும்பணிசெய்ய-வந்தரதுந்துமிமுழங்க வ மரர்மலர்மழைசிந்த - விந்திரனுமலரவனுங்கரியவனுமேத் தெடுப்பச் -குடகத்தளிர்ச் செங்கைத்துணைவிதுணைக்கண்ப ஷிப்ப-வாடகத்திருமன்றத்தனவரதநடஞ்செய்வோய். இ தரவு-முன்மலையுங்கொலைமடங்கலிருரியுமும்மதத்தவன்

மலையுங்கடமலையின்முடையுடலின்வன்றேலும் பொன்ம லையின் வெண்முகிலுங்கருமுகிலும்போர்த்தென்னவின்ம லையும் புயமலையின் புறமலையவிசித்தனையே - கடாகமெ ட்டும் விடங்காணுகமோரொட்டுந் தடணுகமவைவயெட்டுந்த ரித்துள பூர்துகிலொன்றுமுடாசவடல்புரியுங்கொடுவரி யினுடுப்பொன்று மடணுகவரவல்குற்கணிகலையா வசைத் தனையே-வருநீலப்புயன்மலரமலரிதழிக்கண்ணியையுமரு நிலமுயற்களங்க மகன்றமதிக்கண்ணியையுங் கருநிலக்க ண்ணியுமைசெங்கைவருகங்கையெனுந் திருநீலக்கண்ணி யையுஞ் செஞ்சடைமேற் செறித்தனையே-இவைமூன்று ந் தாழிசை கறைவிடமுகவெரிகனல்விழியொடுமிளிர்பி றையெயிறுருடுமிடல்பெறுபகடொடுமடலெறுழ்வலியொ டுமுருமிடியெனவருமொருமறலியதுயிர்கொளமலர்தருக ழலினை - யிலவிதழ்மதிநுதலிரதியோடிரதமதலைவறநடவி டுமொருவனும்வெருவரவலைகடனெடுமுரசதிர்தரவெதிர்த ருசிலைமதனனையடல்செயுநதல்விழியினை-யுலகமோடுயிர் களுமுலைதரவலம்வருமலர்மகள் கொழுநனுமகபதிமுதலி யபுலவருமடிகளோர் புகலெனமுறையிடவலைகடல் விட முனமமுதுசெய்தருளினை - விசையிலெம்பிறைவியும் வெ ருவரவிரசித வசலமதசைதரவடல்புரிதசமுக நிசிசரன்ம ணிமுடிநெறுநெறுநெறுவென வசையில்பொன்மலரடிம ணிவிரனிறுவினை. இவை நான்கும்அராகம். அருவமுமுரு வமுமாகிநின்று மவ்வருவமுமுருவமு மகன்றுநின்றனை- சொல்லொடுபொருளுமாய்த்தோன்றிநின்றுமச்சொல்லை யும் பொருளையுந் துறந்துநின்றனை. இவைநாற்சீரடியிர

ண்டம்போதரங்கம் அந்நலம்விழைந்தவர்க்கறமுமாயினை பொன்னலம்விழைந்தவர்பொருளுமாயினை- யின்னலம்விழைந்தவர்க்கின்பமாயினை-மெய்ந்நலம்விழைந்தவர்வீடுமாயினை. இவைநாற்சீரோரடியால்வந்த நான்கம்போதரங்கம். முத்தொழிலின்வினைமுதனீமூவர்க்குமுழுமுதனியெத்தொழிலுமிறந்தோய்நீயிறவாததொழிலினைநீயிருவிசும்பின்மேயோய்நீ யெழின்மலரின்மிசையோய்நீயரவணையிற்றுயின்றோய்நீயாலின்கீழமர்ந்தோய்நீ. இவைமுச்சீரோரடியெட்டம்போதரங்கம். பெரியைநீசிறியைநீ பெண்ணுநீ யாணுநீ யரியைநீ யெளியைநீ யறமுநீ மறமுநீ விண்ணுநீ மண்ணுநீவித்துநீ விளைவுநீ பண்ணுநீ பயனுநீ பகையுநீ யுறவுநீ இவை யிருசீரோரடிபதினாறம்போதரங்கம்-எனவாங்குஇது தனிச்சொல் கற்பனைகழன்றநின் பொற்கழலிறைஞ்சுதும் வெண்மதிக்கடவுண் மீமிசைத்தவழ்தரத்தண்முகிற்குலக்கடாழ்வுறப்படிதலிற் செங்காலன்னமும்வெண்மருப்பேனமுங்கீழ்மேறுருவ வாரழற்பிழம்பாய்நின்ற நின்றன்மையை யுணர்த்தும்பொன்றிகழ்புலியூர்மன்றுகிழவோனே. இது சுரிதகம். இவ்வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவினுள் - தரவுமுதலிய வாறுறுப்புங்குறைவின்றி வந்தன.

அம்போதரங்க வொத்தாழிசைக்கலிப்பாமேற்சொல்லப்பட்டதாழிசைமுதலிய வாறனுள் - அராகமொழிந்தவைந்துறுப்பையுங்கொண்டுவரும் - இதற்குதாரணமேற்காட்டியவண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவினுள் அராகமொழித்துக்காண்க.

நேரிசையொத்தாழிசைக்கலிப்பா தரவுமுதலியவா றனுள் அராகம்-அம்போதரங்கமொழிந்த நான்குறுப்பை யுங் கொண்டுவரும்-இதற்குதாரணம்.அவ்வண்ணகவொத் தாழிசைக்கலிப்பாவினுள் அராகத்தையும் அம்போதரங்க த்தையுமொழித்துக்காண்க.

ருச. வெண்கலிப்பா - வெண்கலிப்பா கலிவெண்பா வென விருவகைப்படும்.அவற்றுள்வெண்கலிப்பா-கலித்த ளைவிரவியீற்றடிமுச்சீரான்முடியும்.—உம். சேல்செய்தம தர்வேற்கட்சிலைசெய்தசுடிகைநுதன் - மால்செய்தகுழற் கோதைமகிழ்செய்யநடஞ்செய்யுந்-தருணவிளம்பிறைக்க ண்ணித்தாழ்சடையெம்பெருமானின் - கருணைபொழிதிரு நோக்கிற்கனியாதகன்னெஞ்சம் - வாமஞ்சான்மணிக்கொ ங்கைக்கொசிந் தொல்குமருங்குலவர் - காமஞ்சால்கடை நோக்கிற்கசிந்துருகாநிற்குமா-லவ்வண்ணமாறிநிற்றலக மென்று லகமகம்விட்டெவ்வண்ணமாறிநிற்பதின்று. இ துவெண்கலிப்பா.

கலிவெண்பா - வெண்டளைதழுவியீற்றடி முச்சீரான் முடியும்.—உம் சுடர்த்தொடீகேளாய் தெருவில்யாமாடு- மணற்சிற்றிற்காலிற்சிதையா வடர்ச்சியபொற்-கோதை பரிந்து வரிப்பந்துகொண்டோடி நோதக்கசெய்யுஞ்சிறுப ட்டிமேலோர்நா-ளன்னையும் யானுமிருந்தேமாவில்லுளே- யுண்ணுநீர்வேட்டே னெனவந்தாற்கன்னை-யடர்பொற்சிர கத்தால்வாக்கிச்சுடரிழா-யுண்ணுநீருட்டிவா வென்றாளெ ன்யானுந்-தன்னையறியாது சென்றேன்மற்றென்னை-வளை

முன்கைபற்றிநலியத்தெருமந்திட்-டன்னாயிவளொருவன் செய்தது காணென்றேனா - வன்னையலறிப்படர்தரத்தன்னையா-றன்னாநீர்விக்கினனென்றேனாவன்னையும்-தன்னைப்புறம்பழித்துநீவமற்றென்னைக் - கடைக்கண்ணாற்கொல்வான்போனாக்கி நகைக்கூட்டஞ்-செய்தானக்கள்வன்மகன். இது கலிவெண்பா.

௫௫. கொச்சகக்கலிப்பா தரவுக்கொச்சகக்கலிப்பா தரவிணைக்கொச்சகக்கலிப்பா - சிஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா - பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா - மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா-எனவைந்துவகைப்படும். அவற்றுள்-தரவுக்கொச்சகக்கலிப்பா-தரவு-ஒன்றுவருவதாம்.—உம். அஞ்சம்போனடை. இது தரவுக்கொச்சகக்கலிப்பா. இது இவ்வாறுதனித்துவருதலன்றித் தனிச்சொல்லுஞ் சுரிதகமும்பெற்றுவருதலுமுண்டு.

தரவிணைக்கொச்சகக்கலிப்பா-இரண்டு தரவைக்கொண்டுவருவதாம்.—உம். வடிவுடைநெடுமுடிவானவர்க்கும்வெலற்கரிய-கடிபடுநறும்பைந்தார்க்காவலர்க்குங்காவலனாங்-கொடிபடுவரைமார்பிற் கூடலார்கோமானே-தரவு-எனவாங்கு-தனிச்சொல் - துணைவளைத்தோளிவண்மெலியத்தொன்னலந் தொடர்புண்டான் - இணைமலர்த்தாரருளுமே விதுவிதற்கோர்மாறென்று - துணைமலர்த்தடங்கண்ணார் துணையாகக்கருதாரோ - தரவு-அதனால்-தனிச்சொல்-செவ்வாய்ப்பேதையிவடிறத்-தெவ்வாறுங்கொலிஃதெ

ண்ணியவாறே. இது-இடை-இடையே தனிச்சொற்பெற்று சிரியச்சுரிதகத்தான்முடிந்தது.

சிஃறுழிசைக்கொச்சகக்கலிப்பா - சிலதாழிசைக ளோடு பிறவுறுப்புக்களையுங் கொண்டுவரும்.—உம். பருஉ த்தடக்கை மதயானைப்பணையெருத்தின் மிசைத்தோன்றிக குரூஉக்கொண்டவெண்குடைக்கீழ்க்குடைமன்னர்புடை சூழப் - படைப்பரிமான்றேரினொடும் பரந்துலவுமறுகினி டைக்-கொடித்தானையிடைப்பொலிந்தான் கூடலார்கோ மானே. இது தரவு. ஆங்கொருசார்-உச்சியார்க்கிறைவனு புலகமெலாங்காத்தளிக்கும் பச்சையார்மணிப்பைம்பூட் புரந்தரனுப்பாவித்தார் வச்சிரங்காணுதகாரணத்தான்மய ங்கினரோ-ஆங்கொருசார்-அக்காலமணிநிரைகாத்தருவரை யாற் பனிதவிர்த்து - வக்கிரனைவடிவழித்த மாயவனுப்பா வித்தார்-சக்கரங்காணுதகாரணத்தாற்சமழ்த்தனரோ - ஆங் கொருசார் . மால்கொண்டபகைதணிப்பான் மாத்தடிந்து மயங்காச்செங் - கோல்கொண்டசேவலங்கொடியவனுப் பாவித்தார்-வேல்கொண்டதின்மையால் விம்மிதராய்நின் றனரோ. இவைமூன்றுந்தாழிசை - அஃதான்று-தனிச்சொ ல்-கொடித்தேர்த்தோன்றல் கொற்கைக்கோமா னின்புக ழோருவன் செம்பூட்சேஎ-யென்றுநனியறிந்தனர்பலரோ தானு-மவருளொருவனென்றறியலாகா - மையவரையா னைமடங்காவென்றி-மன்னவன்வாழியென்றேத்தத் - தெ ன்னவன்வாழிதிருவொடும்பொலிந்தே. சுரிதகம். இதுத னிச்சொலிடையிடைபெற்றொருதரவு மூன்றுதாழிசையு

ஞ் சுரிதகமுங்கொண்டு நேரிசையொத்தாழிசைக்கலியிற் சிறிதவேறுபட்டுவந்தது.

பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா-பலதாழிசைகளோடு மற்றவுறுப்புகளையுங் கொண்டுவருவன.—உம். தண்மதியேர்முகத்தாளைத் தனியிடத்தாணிகண்டாங் - குண்மதியுமுடைநிறையு முடன்றளாமுன்னுட்கட்-கண்மதியொப்பிளைவயின்றிக் காரிகையைநிலைறகவர்ந்து-பெண்மதியின் மகிழ்ந்தநின் பேரருளும்பிறிதாமோ. இதுதரவு. இளநலமிவள்வாட விரும்பொருட்குப்பிரிவாயேல்-தளநலமுகைவெண்பற் ருழ்குழறளர்வாளோ - தகைநலமிவள்வாடத் தரும்பொருட்குப்பிரிவாயேல்-வகைநலமிவள்வாடி வருந்தியில்லிருப்பாளோ. அணிநலமிவள்வாட வரும்பொருட்குப்பிரிவாயேல் - மணிநலமகிழ்மேனி மாசோடுமடிவாளோ·நாம்பிரியேமினியென்று நறுநுதலைப்பிரிவாயேல்-ஓம்பிரியோமென்வுரைத்த வுயர்மொழியும்பழுதாமோ. குன்றளித்ததிரடோளாய் கொய்புனத்திற்கூடியநாள் - அன்றளித்தவருண்மொழியா லருளுவதுமருளாமோ - சில்பகலுமுடியக்காற் சிலம்பொலிச்சீறடிபரவிப் - பல்பகலுந்தலையளித்த பணிமொழியும்பழுதாமோ. இவையாறுந்தாழிசை-எனவாங்கு-தனிச்சொல் - அரும்பெறலிவளினுந் தரும்பொருளதனினும்-பெரும்பெறலரியன வெறுக்கையுமற்றே. அதனால், விழுமியதறிமதிவாழி - கெழுமியகாதலிற்றரும்பொருள்சிறிதே. இதுசுரிதகம், நாலடித்தரவும்-இரண்டடித்தாழிசையாறும்-தனிச்சொல்லும் - நான்கடி

ச்சுரிதகமும் பெற்றுவந்தபஃறாழிசைக் கொச்சகக்கலி
ப்பா.

மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா-தரவு-தாழிசை-அ
ராகம்-அம்போதரங்கம்-தனிச்சொல்-சுரிதகம்-என்னும்
ஆறுறுப்புமிக்குங்குறைந்தும் பிறழ்ந்துமுறழ்ந்தும் பல
வாறுமயங்கிவருவன. மணிகிளர்நெடுமுடி மாயவனுந்தம்
முனும்போன்-றணிகிளர்நெடுங்கடலுங் கானலுந்தோன்
றுமால்-றுணைவிவந் தவையன்னநொய்ப்பறையசிறையன
னம்-இணைநயந்திணைகூரு மேமஞ்சார்துறைவகேள் மலை
யெனமழையென மஞ்செனத்திணைபொங்கிக்-கனலெனக்
காற்றெனக் கடிதுவந்திசைப்பினும்-விழுமியோர்வெகுளி
போல் வேலாழியிறக்கலா-தெழுமுந்நீர்பரந்தொழுகுமே
மஞ்சால்துறைவகேள். இவையிரண்டுந்தரவு. கொடிபுனை
யுநுழைநுசுப்பிற் குழைக்கமர்ந்ததிருமுகத்தோள்-தொ
டிநெகிழ்ந்ததோள்கண்டுந் துறவலனேயென்றியால். நீர்
பூத்தநிணையிதழ்க்க ணின்றெரிந்தபுருவத்தோள்-பீர்பூத்
தநுதல்கண்டும் பிரியலனேயென்றியால்-கனைவரலாற்றி
ருகணைபோற் கைவில்லாதுண்ணெகிழ்ந்து-நினையுமென்
னிலைகண்டு நீங்கலனேயென்றியால். வீழ்சுடரினெய்யே
போல் விழுமநோய்பொறுக்கலாத்-தாழுமென்னிலைகண்
டுந் தாங்கலனேயென்றியால். கலங்கவிழ்ந்தநாய்கன்போ
ற்களைதுணைபிறிதின்றிப்-புலம்புமென்னிலைகண்டும் போக
லனேயென்றியால். இவையாறுந்தாழிசை-அதனால், அடு
ம்பயிலிறும்பி னெடும்பனைமிசைதொறுங்-கொடும்புறம

டலிடையொடுக்கினகுருகு. செறிதருசெருவிடையெறி தொழிலினையவர்-நெறிதருபுரவியின்மறிதருந்திமில். அரசடைகிளைபடை விளைசெறிமூரசென - நுளைவருதிளையொடுகளைபொருகடல். அலங்கொளியவிர்சுடரிலங்கொளிமலர்தொறுங்-கலந்தெறிகாலொடு புலம்பினபொழில். இவைநான்கும் அராகம். விடாஅதுகலுழுமென் வெள்வளையுந்தவிர்ப்பாய்மன்-கெடாஅதுபெருகுமென் கேண்மையுமிறப்பாயோ. ஒல்லாதுகலுழுமென் ளெளிவளையுஞ்செறிப்பாய்மன் - நில்லாதுபெருகுமென்னெஞ்சமுமிறப்பாயோ. தாங்காதுகழலுமென் கைவளையுந்தவிர்ப்பாய்மன்-நீங்காதுபெருகுமென் னெஞ்சமுமிறப்பாயோ. மறவாதவன்பினேன் மனனிற்குமாறுளையாய்-றுறவாததமருடையேன் றுயர்திருமாறுளையாய். காதலார்மார்பின்றிக்காமக்குமருந்துளையாய்-ஏதிலார்தலைசாய யானுய்யுமாறுளையாய். இணைபிரிந்தார்மார்பின்றி யின்பக்குமருந்துளையாய் -துணைபிரிந்ததமருடையேன் றுயர்திருமாறுளையாய். இவையாறுந்தாழிசை. எனவாங்கு-இதுதனிச்சொல்-பகைபோன்றதுதுறை-பரிவாயினகுறி- நகையிழந்ததுமுகம்-கனிராணிற்றுளம்-தகையிழந்தனதோள் - தலைசிறநததுதயர்-புகைபரந்ததுமெய் - பொறையாயிற்றென்னுயிர்• இவை யிருசீரோரடியெட்டம்போதரங்கம். அதனுல், இதுதனிச்சொல். இனையதரிலையால்-அனையதுபொழுதால்-நினையல்வாழிதோழிதொலையாய்ப்·பனியொடுகழிகவுண்கண்-என்றெடுகெழிகவித்தன்னியநோயே - இதுசுரிதகம். இதுதரவிரண்டும் தாழிசையாறும் தனிச்சொல்லும்

அராகம் நான்கும் பெயர்த்தும் ஆறுதாழிசையும் தனிச்சொல்லும் இருசீரோரடி யெட்டம்போதரங்கவுறுப்பும் பெற்று, நான்கடியாசிரியச்சுரிதகத்தாலிற்றுக் கலிக்கோதப்பட்ட ஆறுறுப்பும், மிக்கும் குறைந்தும் பிறழ்ந்தும் உறழ்ந்தும் மயங்கியும்வந்தமையான் மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

௫௬. வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா- வம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பாக்களுக் குறுப்பாகவருந்தரவு ஆறடியாகவரும்-மற்றைக்கலிப்பாக்களுக்குறுப்பாகவருந்தரவு மூன்றடிமுதலிய பலவடிகளால்வரும்—தாழிசைக்கடி யிரண்டேனு மூன்றேனு நான்கேனும் வரவும் பெறும்.

௫௭. கலித்தாழிசை கலித்துறை-கலிவிருத்தம் -என்னுங்கலிப்பாவின மூன்றனுட்கலித்தாழிசை-இரண்டுமுதலியபலவடிகளா லீற்றடிமிக்கு ஏனையடி தம்முளளவொத்துநிற்பத் தனித்தேனுமொருபொருண்மேன் மூன்றடுக்கியேனும்வரும்.—உம். இருகூற்றுருவத்திருந்தன்பொழிற்றில்லை - யொருகூற்றின்கூத்தைபுணராய் மடநெஞ்சே.. யொருகூற்றின்கூத்தை யுணராயெனின்மற்றப் - பொருகூற்றந்தோற்றப் புலம்பேல்வாழி மடநெஞ்சே. இதனீற்றடிமிகுந்து தனித்துவந்த நான்கடிக்கலித்தாழிசை.—பூண்டபறையறையப்பூதமருள-நீண்டசடையானாடுமே - நீண்டசடையானாடுமென்ப - மாண்டசாயன்மலைமகள்காணவேகாணவே-எனச்சிறுபான்மை ஏனையடிகளொவ்வா

அ வருதலுமுண்டு.—செல்லார்பொழிற்றில்லைச் சிற்றம்பலத்தெங்கள்-பொல்லாமணியைப் புகழ்மினேவம்மின்புலவீர்காள்-முத்தேவர்தேவை முகிலூர்திமுன்னோன - புத்தேளிர்போலப்புகழ்மினே வம்மின்புலவீர்காள் - ஆர்கற்பகக்கன்றளித்தருளுந்தில்லைவனப் - பூங்கற்பகத்தைப்புகழ்மினேவம்மின்புலவீர்காள். இது ஒருபொருண்மேன்மூன்றடுக்கி யீற்றடிமிக்குவந்த கலித்தாழிசை.

௭௨. கலித்துறை ஐஞ்சீரடி நான்கினைக்கொண்டுவரும்.—யானுந்தோழியுமாயமுமாடுந் துறைநண்ணித் - தானுந்தேரும்பாகனும்வந்தென் னலனுண்டான்-றேனும்பாலும்போல்வனசொல்லிப் பிரிவானேற் - கானும்புள்ளுங் கைதையுமெல்லாங்கரியன்றே.

௭௩. கலிவிருத்தம் நாற்சீரடி நான்கினைக்கொண்டு வரும்.—உம். வேய்தலைநீடிய வெள்ளிவிலங்கலி-னோய்தவிரென்கட ராழியினன்றமர் - வாய்தலினின்றனர்வந்தெனமன்னன்முன் னிதலைசென்றனை நீள்கடைகாப்போய் எனவரும்.

௭௪. மேற்சொல்லப்பட்ட கலிப்பாவினுங் கலித்துறையினும் வேறுபட்டுவருங் கலிப்பாவுங் கலித்துறையுமுண்டு.—அவை கட்டளைக்கலிப்பாவுங் - கட்டளைக்கலித்துறையுமாம் அவற்றுள்-கட்டளைக்கலிப்பா முதற்கண்மாச்சீர்பெற்று நாற்சீரான்வருவதனையடியாகவும் அஃதிரட்டிகொண்டதோரடியாகவும் அவ்வடி நான்குகொண்டு

வரும்-அரையடிக்கெழுத்து முதலசைநேராயிற்பதினொன்றும்-நிரையாயிற்பன்னிரண்டுமாம்.—உம். சொல்லினிரிவராசைப்பட்டாரொன்று சொன்னசொற்பொருள் வேறுகொண்டையையோ-புல்லுவாரொவ்விதத்தினு மென்றுளம்பூரித்தேயிருந்தேன் மடமங்கைமீர்-செல்லுலாம்பொழிற்கூவநகருறைதிருவிற்கோலரினுமருளாமையா-லல்லதேதுதிகம்பரரொன்பொரு ளறையின்வன்கண்ண ராவரொன்மட்டுமே.—கட்டளைக்கலித்துறை - முதற்சீர்நான்கும் வெண்டளைபிழையாமனிற்பக்கடையொருசீரும் விளங்காயாகி வருமைஞ்சீரடிநான்குகொண்டுவரும். அதுவிளங்காயாய் வருவதன்றிச் சிறுபான்மை வேறுபட்டும்வரும். ஓரடிக்கெழுத்துமுதலசைநேராயிற் பதினாறும்நிரையாயிற் பதினேழுமாம்.—உம். சிலைமலிவாணுத லெங்கையதாக மெனச்செழும்பூண் மலைமலிமார்பி னுதைப்பத்தந்தான்றலை மன்னர்தில்லை யுலைம்லிவேற்படை யூரனிற்கள்வரில்லென்னவுன்னிக் கலைமலிகாரிகை கண்முத்தமாலைகளுழ்ந்தனவே எனவரும்.

௬௧. வஞ்சிப்பா பெரும்பாலுந் தன்றளையுஞ் சிறுபான்மை பிறதளையுந்தழுவி யிருசீரடியாலேனு முச்சீரடியாலேனு மூன்றுமுதலிய பலவடிகளைக்கொண்டு தனிச்சொற்பெற்று அகவற்சுரிதகத்தான் முடிவதாம்.—உம். பூந்தாமனாப்போதலமரத்-தேம்புனலிடைமீன்றிரிதரும்-வளவயலிடைக்களவயின்மகிழ்-வினைக்கம்பலைமனைச்சிலம்பவு-மனைச்சிலம்பியமணமுரசொலி-வயற்கம்பலைக்கயலார்

ப்பவும்-நாளும் மகிழமகிழ்தூங்கூரன் புகழ்தலானுப்பெருவண்மையனே. இதுகுறளடி வஞ்சிப்பா. எறிவெண்டிரைக்கடல்சூழ் புவியெளிதெய்திறு மிறவக்துடைப்பொழுதய்ந்திடலுளதென்னினுமறிவின்றிறத்துயர்ந்தோர்படிறிலசகின்றிலர் - அதனால்-முன்வருமின்பிறு முறைப்படநாடிற் பின்வருமிடர்மிகப்பெரிதாமெனவே. இதுசிந்தடி வஞ்சிப்பா.

௯௨.வஞ்சித்தாழிசை வஞ்சித்துறை வஞ்சிவிருத்தம் என்னும் வஞ்சிப்பாவினமூன்றனுள் வஞ்சித்தாழிசை இருசீரடிநான்குகொண்டதொருபொருண்மேன்மூன்றடுக்கிவரும்.—உம். பிணியென்றபெயராமே - துணிகின்றதவஞ்செய்வீ-ரணிமன்றலுமைபாகன்- மணிமன்றுபணியீரோ-என்னென்றபெயராமே கன்னின்றதவஞ்செய்வீர்-நன்மன்றலுமைபாகன் - பொன்மன்றுபணியீரோ - அரிதென்றபெயராமே - வரைகின்றதவஞ்செய்வீ - ருருமன்றலுமைபாகன்-திருமன்றுபணியீரோ. இதுவஞ்சித்தாழிசை.

௯௩. வஞ்சித்துறை இருசீரடிநான்குகொண்டுதனித்துவரும்.—உம். போதிவன்றன்-சாரவிருந்த - லூரினுமில்லென்-முரவிகழ்ந்தே-எனவரும்.

௯௪. வஞ்சிவிருத்தம் முச்சீரடிநான்குகொண்டுவரும்.—உம். சார்தனேரியதாழ்மொழி-காய்ந்தவேலிருகாதிலும்-போர்தபோன்றபுகுந்திட-மாந்தராகுலமன்னினர்-எனவரும்.

௯௫. மருட்பா - புறநிலைவாழ்த்தும் - கைக்கிளையும் வாயுறைவாழ்த்தும் - செவியறிவுறூஉமென்றும் நான்கு பொருண்மேலும் வெண்பாமுதலாக ஆசிரியப்பா ஈருசவருவனவாம். அவற்றுள் கைக்கிளைமருட்பாவினிற்றில்வரும் ஆசிரியம் இரண்டேயடியினதாய் அவ்விரண்டடியுள்ளும் ஈற்றயலடி முச்சீரதாய்வரும்.

(புறநிலைவாழ்த்துமருட்பா.)

தென்றலிடைபோழ்ந்து தேனார்நறுமுல்லை முன்றின்முகைவிரியு முத்தநீர்த்தண்கோளூர்-குன்றமமார்ந்தகொல்லேற்று ணிற்புறங்காப்ப என்றுந்திராநண்பிற்றேவர் சீர்சால்செல்வமொடு பொலிமதிசிறந்தே. இதுவழிபடுதெய்வ நிற்புறங்காப்பப்பழிதீர் செல்வமோடொருகாலைக்கொருகாற்சிறந்து பொலிகவென்றமையாற் - புறநிலைவாழ்த்துமருட்பா.

(கைக்கிளைமருட்பா.)

திருநுதல்வேர்வரும்பத் தேங்கோதைவாடும் இருநிலஞ்சேவடியுந்தோயும் அரிபரந்த-சேயிதழுண்கணுமிமைக்கும் ஆகுமற்றிவ ளகலிடத்தணங்கே. இதுதணிதலைநுதலிய வொருதலைக்காமமாதலாற்-கைக்கிளைமருட்பா. இதனுள் ஆசிரியவடியிரண்டேயாய் அவற்றுள்ளும் ஈற்றயலடி முச்சீராய்வருவதுகாண்க.

(வாயுறைவாழ்த்துமருட்பா.)

பலமுறையுமோம்பப் படுவணகேண்மின் சொலன்முறைக்கட்டோன்றிச் சுடர்மணித்தேரூர்ந்து நிலமுறையி

ருண்ட பிகரில்லார்மாட்டுஞ் சிலமுறையல்லது செல்வங் கணில்லா றிலக்குமெறிபடையு மாற்றலுமன்புங் கலந்த தங்கல்வியுந் தோற்றமுமேனைப் பொலன்செய் புனைகல ஞே டிவ்வாறனுலும் விலங்கிவருங்கூற்றை விலக்கலுமா கா அனைத்தாதனியிருங் காண்டீர்நினைத்தக்க கூறியவெ ம்மொழி பிழையாது தேறிநீரொழுகிற் சென்றுபயன்றரு மே. இது மெய்ப்பொருள் சொன்னமையால் வாயுறை வாழ்த்துமருட்பா.

(செவியறிவுறூஉமருட்பா.)

பல்யானைமன்னர் முருங்கவமருழந்து கொல்யானை த்தேரொடுங் கோட்டந்து-நல்ல தலையாலங்கானம் பொ லியத்தொலையாப் படுகளம்பாடுபுக் காற்றிப்பகைஞர் அ டுகளம்வேட்டோன் மருகவடுதிறல் ஆளிவியிர்தோட்பெ ருவழுதியெஞ்ஞான்றும் ஈரமுடைமையயா யென்வாய்ச் சொற்கேட்டி உடையவுழவனை நெஞ்சனுங்கக்கொண்டு வருசாலுழவர்க்கு வேளாண்மைசெய்யல் மழவிறைக் கும் வரைக்காணிநீயீட்டம் காட்டுமமைச்சனை யாற்றத் தெளியல் அமைத்தவரும்பொரு ளாறன்றிவெளவல் இ னத்தைப்பெரும்பொரு ளாசையாற்சென்று மன்றமறுக வகழாதியென்றும் மறப்புறமாக மதவாயாரோம்பும் அறப்புறமாசைப்பட் டேற்கவறத்தால் அவையார்கொடு காத் திருத்திநவையாக நட்டார்குழிசி சிதையாதியொட் டார் செவிபுதைக்குந்திய கடுஞ்சொற்கவியுடைத்தாய்க் கற்றூர்க்கினனுகிக் கல்லார்க்கடிந்தொழுகிச் செற்றூர்ச்

செறுத்துநிற் சேர்ந்தாரையாக்குதி அற்றமறிந்த வறிவி னும்மற்றும் இவையிவைவியா தொழுகுமியாப் பொரு கடலாடை நிலமகள் ஒருகுடைநீழற் றுஞ்சவண்மன் னே. இதுவியப்பின்றி உயர்ந்தோர்கண் வியந்தொழுகுத ல் கடனெனவரசர்க்குணாத்தமையாற்-செவியறிவுறூஉம ருட்பா.

௬௬. நூற்பா—சிலவகையெழுத்துக்களாலாகியசொ ற்றொடராய்ப் பல்வகைப்பொருள்களைவிளக்கித் திட்பமு நுட்பமு மமைந்துவரும்.—உம். எழுத்தெனப்படுவ வக ரமுத னகரவிறுவாய்முப் பஃதென்பசார்ந்துவரன்மரபி ன்மூன்றலங்கடையே எனவரும்.

௬௭. கூனென்பது—வெண்பாமுதலியசெய்யுட்களி ன் முதலடியினொரோவிடத்துப் பொருள்படத்தனித்து நிற்பதாம். அதுவஞ்சிப்பாவின் முதற்கணன்றி யிடையி லுமிறுதியிலும்வரும்.—உம். உதுக்காண்-சுரந்தானுவண் கைச் சுவானமரப்பூதன் பரந்தானுப்பல்புகழைப்பாடி- எம். இவற்றுள்-அ இ உ எ ஒ குறிலைந்தே-எம்வரும்.

யாப்பதிகாரமுற்றிற்று.

---

நான்காவது.

# அணியதிகாரம்.

---

அணியென்பது—செய்யுட்கழகு செய்துநிற்பதாம்.

அவ்வணி—பொருளணியுஞ் சொல்லணியுமென விருவகைப்படும் - இவ்விரண்டிலும் பொருளணியே சிறப்புடைத்தாம். அதனை இங்குக்கூறப்படும்.

அப்பொருளணி—உவமையணிமுதல் - ஏதுவணி இறுதியாக நூறும்-அவற்றைக்கூறுதும்.

௧. உவமையணி-அஃதாவது-இரண்டு பொருள்களுக்கு ஒப்புமையை விளங்கச்சொல்லுதலாம். இதனை வடநூலார் உபமாலங்காரமென்பர்-அது விரியுவமையுந் தொகையுவமையுமென விருவகைப்படும். அவற்றுள்—விரியுவமையாவது-உபமானமும் - உபமேயமும் - பொதுத்தன்மையும்-உவமையுருபும்-ஆகியநான்கும் விரிந்துவருவதாம். உம். பால்போலுமின்சொற் பவளம்போற்செந்துவர்வாய்ச்சேல்போற்பிறழுந் திருநெடுங்கண் மேலாம் புயல்போற்கொடைக்கைப் புனனாடன்கொல்லி யயல்போலும்வாழ்வதவர். இதில் - பால்போலுமின்சொல்-என்புழி. பால்-உபமானம். சொல்-உபமேயம். இனிமை-பொதுத்தன்மை.

போலும்-உவமையுருபு.—தொகை யுவமையாவது - உப மேயமொழிந்தமூன்றனுள் - ஒன்றும்பலவுந் தொகுதலா லாகியவேழுமாம். அவை உருபுத்தொகை - பொதுத்தன் மைத்தொகை-பொதுத்தன்மையுருபுத்தொகை - உவமான த்தொகை - உருபுவமானத்தொகை - பொதுத்தன்மையுவ மானத்தொகை - பொதுத்தன்மையுருபுவமானத்தொகை- எனப்பெயர்பெறுமென்றறிக. உம். புயற்கருங்குழலாள். காந்தட்போதினைநிகர்க்குங்கையாள். கயற்கணாள். முகத் திற்கொப்பாங்காந்திகொள்பொருளுண்டோ. வாய்நயச் சிவப்புளதொன்றில்லை. நாசிபோல்வதுமற்றுருகுங். குயிற் கிளவியினாள். பானவகுணத்தையார்குறிக்கவல்லார். இதி ல் அவ்வேழுமுறையேகாண்க. காந்திகொள்பொருளுண் டோவென்புழி - பொருளுலகத்திலுளதாகவுமில்லையென லால் - உபமானத்தொகையாயிற்று. குயிற்கிளவியினாள்- என்புழி-குயிலினதிசைபோலுமதுரமாகியகிளவியினாள்- எனவிரித்துரைக்கவேண்டுதலால்-குயிலினதிசைஉபமான மாம்.—வடநூலார் - பொதுத்தன்மையைச் சாதாரணத ருமமென்றும் - உவமையுருபை - உபமாவாசகமென்றும்- ஒப்புமையைச்சாமியமென்றும் - சாதர்சியமென்றுங்கூ றுவர்.—போலப்புரைய வொப்பவுறழ மானக்கடுப்பவே ரநிகரவிழையவேய்ப்பவன்னவின்னவென்பவும் பிறவுமு வமத்துருபே.

உ. இயைபின்மையணி.அஃதாவது-ஒருவாக்கியத்துள் ஒருபொருளையே யுபமானமாகவு முபமேயமாகவுஞ் சொ

ல்லுதலாம். இதனைவடநூலார் - அநந்வயாலங்காரமென்பர் - தண்டியாசிரியர்பொது நீங்குவமையென்பர். உம். தேனே யனையமொழிச் சேயிழையாள் செவ்வியிருற் றனே யுவமைதனக்கு. இதில் - இப்பொருளுக்கொப்பிரண்டாவதொன்றில்லையென்பதுகருத்து.

௩. புகழ்பொருளுவமையணி - அஃதாவது - இரண்டு வாக்கியங்களுள். முன்னதிலுபமானமாகச்சொல்லப்பட்டதைப்பின்னதிலுபமேயமாக்கியும் - உபமேயமாகச்சொல்லப்பட்டதையுபமானமாக்கியுஞ்சொல்லுதல். இதனைவடநூலார் உபமேயோபமாலங்காரமென்பர்-தண்டியாசிரியரிதரவிதரமென்பர். உம். நின்புடையறநிகர்த்தோங்குநின்பொரு-வின்புடைப்பொருணிகர்த்தோங்குமெய்த்தறந்தன்புடைக்கடலுடைத்தரணியோர்க்கெலா-மன்புடைமுறைசிறந்தளிக்குமண்ணலே-எனவரும்.—அன்றியும்-களிக்குங் கயல்போலுநின்கணின்கண்போற் களிக்குங்கயலுங்கனிவாய்த்தளிர்க்கொடியே தாமரைபோன்மலரு நின்முக நின்முகம்போற் றாமரையுஞ்செவ்விதரும்-எனத்தொன்றுதொட்டுவரும் - உபமானுபமேயங்களை யவ்வாறு சொல்வதுமது. இதன்கருத்து மூன்றாவதொப்பதொன்றின்றென்பதாம்.—உபமேயம் - வர்ணியமென்றும் - புகழ்பொருளென்றும் - புனைவுளியென்றும்-உபமானம். அவர்ணியமென்றும் - அல்பொருளென்றும் - புனைவிலியென்றுஞ்சொல்லப்படும்.

௪. எதிர்நிலையணி. அஃதாவது-உபமானத்திற்குக்குறைவுதோன்றச்சொல்லுதலாம். இதுஉவமையணிக்கு எ

திரியதாய் நிற்றலினப்பெயர்த்து. இதனைவடநூலார்பிரதி பாலங்காரமென்பர். அது ஐந்துவகைப்படும். அவற்றுள்.— ௧-வது. உலகத்திலுபமானமாய்ப்பிரசித்தமாக வழங்குகின்றபொருளை யுபமேயமாக்கிச்சொல்லுதல். உம். அதிர்கடல்சூழ்வையத் தணங்குமுகம்போல மதியுஞ்செயுமேமகிழ் —௨-வது. அவர்ணியத்தையுபமேயமாகக்காட்டிவர்ணியத்தையிகழ்தல். உம். பொன்செருக்கைமாற்றுமெழிற் பூவை திருமுகமே யுன்செருக்குப்போது மொழிகவினிக்- கொன் செருக்கு-மிக்கமகரக்கடற்பூ மிக்கண் மகிழ்செயலா. லொக்குமதியுமுனே.—௩-வது. வர்ணியத்தை யுபமேயமாகக்காட்டி அவர்ணியத்தையிகழ்தல். உம். ஆற்றலுறுகோலையிலா ரெனக்கொப்பென்றந்தோ-கூற்றுவனீவிஞ்செருக்குக்கொள்கின்றாய்-சாற்றுவல்கேள் - வெண்டிரைசூழ்ஞாலமிசை யுனக்கொப்பாகவே-யொண்டொடிதன்னிள்விழியுமுண்டு —௪-வது. வர்ணியத்தோடு அவர்ணியத்திற்கு ஒப்புமையின்றெனச்சொல்லுதல். உம். இறைவிமதுரமொழிக்கின்ன முதொப்பாமென்-றறைவதபவாதமாம்.—௫-வது. உபமானத்தைவீணென்றுசொல்லுதல். உம். செங்கயற்கணுயுன் திருமுகத்தைப்பார்ப்பவர்க்குப் பங்கயத்தா லுண்டோபயன்.

௫. உருவகவணி. அஃதாவது-உபமேயத்திலுபமானத்தை யொற்றுமையினாலாவது-அதன்செய்கையினாலாவது-ஆரோபித்தலாம். இதனை வடநூலார்ரூபகாலங்காரமென்பர். ஆரோபமாவது உபமான வுபமேயங்களி னபேதவுணர்ச்சி. அது ஒற்றுமையுருவகம் அதன்செய்கையுருவகம் - எ

னவிருவகைப்படும். இவற்றைவடநூலார்அபேதரூபகமெ ன்றும்-தாத்ருப்பியரூபகமென்றுங்கூறுவர். அவ்விரண்டு ம்-மிகை-குறை-அவையின்மை-என்பவைகளான்மும்மூன் றும். அவற்றுள்—௧-வது. மிகையொற்றுமை யுருவகம் உம். உயர்புகழ் நங்கோனுமுருவுடையமார - னயவழகை நாடுமென்கண். இதில்-மாரனுக்கு உருவமிகையாகச் சொ ல்லப்பட்டது.—உ-வது. குறையொற்றுமையுருவகம்.— உம்.எல்வாருமேத்துபுகழோர்தலிவனெற்றிவிழி யில்லாதச ங்கரனேயாம். இதில்-சங்கரற்கு நெற்றிக்கண் குறைவாகச் சொல்லப்பட்டது.—ங-வது. அவையிலொற்றுமையுருவக ம். உம். பவக்கடல்கடந்துமுத்தியங்கரையிற் படர்பவர்தி சைப்பறநோக்கித் தவக்கலனடத்த வளர்ந்தெழுஞ்சோண சைலனே கயிலைநாயகனே. இதில் - கடன்முதலியவைமி கைகுறைவின்றிச் சமனாகச்சொல்லப்பட்டன.—ச-வது. மிகையதன்செய்கையுருவகம். உம். மங்கைவதன மதியங் களங்க முடைத்-திங்களிமிக்கெள்ளல்செயும்-இதில் முக மதிக்குக் களங்கமில்லாமை யதிகமாகச்சொல்லப்பட்ட து-ஈண்டுமுகமதியென்பதற்குச் சந்திரனதுசெய்கையை யுடைய முகமெனப் பொருள்கொள்க.—ரு-வது. குறைய தன்செய்கையுருவகம். உம்.பொருதிரைசேர்தண்பாற்புண ரிபிறவாவே-ரொருதிருவிம்மாதென்றுணர். இதில் - இத்தி ருவுக்குப் பாற்கடலிற்பிறத்தல்குறைவாகச் சொல்லப்பட் டது.—சு-வது. அவையிலதன்செய்கையுருவகம். உம்.இ ம்மான்முகமதியே யின்புசெயுமதனு-லம்மாமதிப்பயனெ

ன்னும் இதில்- முகமதிக்குமிகையுங்குறையுஞ்சொல்லாம ற் சமஞ்செய்தனுகாண்க.

சா. திரிபணி. அஃதாவது-உபமானப்பொருளானது அப்பொழுது நிகழ்கின்ற செய்கையிற்பயன்படுதற்பொ ருட் டுபமேயத்தினுருவத்தைக்கொண்டு பரிணமித்தலாம். இதனை. வடநூலார்பரிணுமாலங்காரமென்பர்—உம். செ ய்யவடிக்கமலத்தாலத் திருத்திழையாள்-பையநடந்துபசு ம்பொழிலுற்-றய்ய-வலர்கட்குவளையினுனோக்கியகத்தன் பிற்-சிலசொற்றனளேதெரிந்து. இதில் கமலமுங்குவளையு மாகியவுபமானப்பொருள்கள் நடத்தலுநோக்கலுமாகிய செய்கையி லுபயோகித்தற் குபமேயரூபத்தைக் கொண் டுதிரிந்தன-அடியுருக்கொண்டுதிரிந்தகமலமெனவும்-கண் ணுருக்கொண்டு திரிந்தகுவளையெனவும்விரித்துரைத்துக் கொள்க.

எ. பலபடப்புனைவணி. இதனைவடநூலார் உல்லேகா லங்காரமென்பர். அது இருவகைப்படும். அவற்றுள்—ஃ வது. ஒருபொருளிற்பலரும் பலதருமங்களினுலே பல பொருள்களை யாரோபித்தல். உம். ஆரணங்காணென்பர ந்தணர் யோகியராகமத்தின்-காரணங்காணென்பர் காமு கரானவர்காமநன்னூ-லிதென்பரேரணங்காணென்பரெண் ணரெழுத்தென்பரின்புலவோர் - சீரணங்காய சிற்றம்பல க்கோவையைச்செப்பிடினே-எனவரும்.—உ-வது. ஒருவ ரேயொருபொருளில் விஷயபேதங்களாற் பலபொருள்க ளையாரோபித்தல். உம். செல்வமதிற்றனதன் செப்புகோ

கட்டிற்கன்னன்கல்விதனிற்சேடனிவன்காண்-எனவரும். தருமன்றன்னனியாற் றனதிகையால்வருணன் கூற்றுயி ர்மாற்றலின்வாமனேயருமையா லழகிற்கனையைர்தடை த்திருமகன்றிருமாலேமன்னனே. இதுவுமது.

அ. நினைப்பணி. அஃதாவது - ஒருபொருளைக்கண்டு ஒப்புமையினாலே மற்றொருபொருளை நினைத்தலாம். இத னைவடநூலார்-ஸ்மிருதிமதலங்காரமென்பர். உம். காத லரசஞ்சமலர் கண்டவெனதுமனக் - கோதைமுகந்தன் னைநினைக்கும்.

கூ. மயக்கவணி. அஃதாவது-ஒப்புமையினாலே யொ ருபொருளை மற்றொருபொருளாகவறிதலாம். இதனைவட நூலார் பிராந்திமதலங்காரமென்பர்-பிராந்தியாவது அது வாகாததையதுவெனவறிதல். உம். மழைக்கண்மங்கைய ர் பயிறரமரகதமணியி-னிழைத்தசெய்குன்றின் பைங்கதி ர்பொன்னிலத்தெய்தக் - குழைத்தபைந்தரு நிழலிற்குலவு மானினங்க - டழைத்தபுல்லென விரைவொடுதனித்தனி க திக்கும். இதில் - மரகதமணிக்கதிரைப்புல்லெனவறிந்தது.

ய. ஐயவணி. அஃதாவது - ஒப்புமையினாலே யொரு பொருளைக்கண்டி-துவோவதுவோ வெனச்சந்தேகித்தலா ம். இதனை வடநூலார் சந்தேகாலங்காரமென்பர். உம். தாதளவிவண்டுதடுமாறுந்தாமரைகொல் மாதர்விழியுலவு ம் வாண்முகங்கொல் யாதென்றிருபாற்கவர்வுற்றிடையூ சலாடியொருபாற்படாதென்னுளம்-எனவரும்.

௰௧. ஒழிப்பணி. அஃதாவது - ஒருதருமத்தை யாரோபித்தற்பொருட்டொருதருமத்தை மறுத்தலாம். இதனை வடநூலார் அபநுதியலங்காரமென்பர். அது அறுவகைப்படும். அவற்றுள்.—௧-வது. வெற்றொழிப்பு. இது உபமானதருமத்தையாரோபித்தற்கு உபமேயதருமத்தையொழித்தலாம். உம். மதியன்றிதுபுகலின் வானதியிற்றோன்றும்-புதியதொருவெண்கமலப்பூ.—௨-வது. காரணவொழிப்பு. இதுமேற்சொல்லப்பட்டவொழிப்பே காரணத்தோடுகூடிவருதலாம். உம். பொங்குவெம்மைபொழிதலினலிது-திங்களன்றுதினகரன்றானன்று-கங்குலாதலினற்கடனின்றெழீஇத் - தங்குறும்வடவைத்தழலாகுமே.—௩-வது. வேறுபாட்டொழிப்பு. இது வர்ணியத்திலாரோபித்தற்பொருட்டு மற்றொருபொருளின்றருமத்தையொழித்தல். உம். தெரியுமிதுதிங்களன்றுசெழும்பூ-ணரிவைமுகமேதிங்களாம். இதில்-திங்களின்றரும மதனிடத்தொழிக்கப்பட்டு வர்ணியமாகியமுகத்திலாரோபிக்கப்பட்டது.—௪-வது. மயக்கவொழிப்பு. இது ஒருபொருளை மற்றொருபொருளென்றுகொள்ளும் பிராந்தியை யுண்மைகூறியொழித்தல். உம். மனக்கினியதோழி மடந்தைமுகநோக்கி-யுனக்குடலினென்றியெழுவெப்பர்- தனக்குச்-சுரநோயோகாரண ஃ சொல்லெனவதான்று-பொருமாரனென்றனளப்பொன். இதில்-மன்மதனிடத்துண்டாகிய சுரப்பிராந்திமாரனென்றுகூறி யொழிக்கப்பட்டது.—௫ - வது. வல்லோரொழிப்பு. இது பிற னையமுற்றுவினவிய தஞ்சொல்

விறுண்மைப்பொருளை வல்லோர் அச்சொல்லுக்குமற்றொ ருதாற்பரியத்தைக்கற்பித்து மறுத்தல். உம். இலங்கயிற் கனுளிகுளைக் கெண்காலைப்பற்றிப் - புலம்பியதண்டெடன் றுபுகல-விலங்கியப-வின்றுவருமற்றொருத்தி நின்கணவ னேவென்ன-வன்றுசில்ம்பென்றுளவள்.—கூ-வ௲. வஞ் சகவொழிப்பு. இது வஞ்சனை-கபடம்-பெயர்முதலியசொ ற்களால்வர்ணியத்தினது தருமத்தைமறுத்தல். உம். இம் மடந்தை கட்கடைநோக்கென்றும் பெயரினைக்கொண்-ட ம்மதவேள்வாளியடும்.

ய௨. தற்குறிப்பணி. அஃதாவது - ஒருபொருளை மற் றொருபொருளினது தருமசம்பந்தத்தினாலே யிஃதஃதன் றேனறுதெரிந்திருந்து மப்பொருளாக அத்தியவசயித்த லாம். இதனை வடநூலார் உத்ப்ரேக்ஷாலங்காரமென்பர்- அத்தியவசாயமாவது. ஒருபொருளின்மற்றொருபொருளி னபேதத்தை யையத்துடனறிதல் - அத்தியவசாயம்-சம் பாவனை-தற்குறிப்பு-உத்ப்ரேக்ஷை-என்பனவொருபொரு ட்சொற்கள் - ஒருபொருளெனப்பட்டதை விஷயமெனவு ம் புலமெனவும் - மற்றொருபொருளெனப்பட்டதை விஷ யியெனவும் புலங்கொளியெனவுஞ்சொல்லுவர். போல- நினைக்கின்றேன் - நிச்சயம் - உண்மை-துணிவு-முதலிய சொற்களிதற்குருபுகளாய் விரிந்தேனும் - தொக்கேனும் வரும். அதுபொருட்டற்குறிப்பு. ஏதுத்தற்குறிப்பு-பயன் றற்குறிப்பு - எனமூவகைப்படும். இவற்றைமுறையேவட நூலார் - வஸ்துத்ப்ரேக்ஷை - ஏதுத்ப்ரேக்ஷை - பலோத் ப்ரேக்ஷை-என்பர்- இவற்றுள் - விஷயம்விரிந்துநிற்றலுந்

தொக்குவருதலுமாகிய விரண்டாலும் பொருட்டற்குறிப்பிரண்டாம் - ஒழிந்தவிரண்டும் விஷயமுளதாதலுமிலதாதலுமாகிய விரண்டாலு மிவ்விரண்டாம்-அவைமுறையேகூறுதும்.—ஙு௰வது. விரிபுலப்பொருட்டற் குறிப்பு. உம். சேமிப்பெடைத்திரளினெஞ்சங்களிற்றோன்றுங்-காமத்தழலிற்கதித்தோங்கு-தூமத்தின்- கூட்டமெனவேகுறிக்கின்றேன் மேதினிமே-ளுட்டமறையிருளைநான். இதில் இரவின்கணெங்கும் வியாபித்தவிருளில்-கருமைகண்மறைத்தன்முதலிய தருமசம்பந்தத்தினு லப்போது தத்தஞ்சேவலைப்பிரிவுற்றுப் பலவிடங்களிலுமிருக்கின்ற சக்கிரவாகப்பேடைகளினுள்ளத் தெரிந்தெழுதற்கு மூளுகின்ற காமத்தீயிற்றோன்றும் புகைக்கூட்டமாகியபொருளினபேதமத்தியவசயிக்கப்பட்டது-இருளாகியவிஷயம் விரிந்துநின்றது-புகைக்கூட்டம்விஷயி. இவண்முகத்தைச்சந்திரனென்று நினைக்கின்றேன் - என்பதுமது.—உ-வது, தொகுபுலப்பொருட்டற்குறிப்பு. உம், காரிருளங்கங்கலைப் பூசுதல்போலும் பேருலகந்தன்னிற் பெரிது - எம். மைம்மாரியைவானம்பெய்வதுமானத்தோன்று- மிம்மாநிலத்தினிருள்-எம், சொல்லப்பட்ட விவ்விரண்டிலும்-இருளது வியாபித்தலில்-விண்முதன் மண்காறுமெல்லாவற்றையுங் கரியனவாக்குதலாகிய தருமசம்பந்தத்தினுலே இருளை வினைமுதலாகவுடையபூசுதலினது அபேதமும் ஆகாயத்தைக் கருத்தாவாகவுடையமைம்மழைபெய்தலினது அபேதமும் அத்தியவசயிக்கப்பட்டன. இவ்விரண்டிலுமிருளினது வியாபித்தலாகிய விஷயந்தொக்குவந்தது- பூசுதலும்பெய்த

லும் விஷயிகள்.—௩-வது.உளபுலவேதுத்தற்குறிப்பு.உம். ஏந்திழைநின்று ளவலியின்மேன்மிதித்தலினாற் - சேந்த வவென்றுள்ளுமென்னெஞ்சு. இதில்-பாதங்களின தியற்கைச் சிவப்பிற்கேதுவாகாத பூமியின்மிதித்தலில்-ஏதுத்தன்மை அத்தியவசயிக்கப்பட்டது-மிதித்தலாகியவிஷயமுளதாகுகையா லுளபுலமாம்.ஏதுத்தன்மைவிஷயி.—௪-வது. இல்புலவேதுத்தற்குறிப்பு. உம். முகவொளியைப்பாவாய்பெறற்குமுண்டகத்தோ. டிகலுமதியையமிலை. இதில்-இயல்பிலுண்டாகிய தாமலாமதிகளின் பகைக்கேதுவாகாத பாவைமுகத்தொளி விருப்பத்தி லேதுத்தன்மையத்தியவசயிக்கப்பட்டது-அவ்விருப்பமதிக்கின்மையாலில்புலம். விருப்பம்விஷயம் - ஏதுத்தன்மைவிஷயி.—௫-வது. உளபுலப்பயன்றற்குறிப்பு.உம். குயிற்கிரளையோட்டுமொழிக்கோமளமின்னே-நின் வயிற்றுமடிப்பாகிய நல்வண்பொற்-கயிற்றினன் - மொட்டுண்டபாரமுலையைச்சுமந்திடற்குக் கட்டுண்டதோநின்னிடை. இதில்-இடையானது கொங்கைகளைத் தன்னியல்பிற்சுமத்தலான் மடிப்பாகிய பொற்கயிற்றின்கட்டுக்குப் பலனாகாதிருக்க வச்சுமத்தலிற் பலத்தன்மையத்தியவசயிக்கப்பட்டது - சுமத்தலாகிய விஷயமுளதாகுகைபால் உளபுலம் - பலத்தன்மைவிஷயி.—௬-வது. இல்புலப்பயன்றற்குறிப்பு. உம். ஒண்டொடிகேளுன்பதசாயுச்சியத்தையுற்றிடற்கே - முண்டகமென்போதுமுதுநிலத்திற் - றண்டுறைநீர் - நின்றொருதாளினெடிதுதவம்புரியு-மென்றறைதற்கையமிலை. இதில்-கமலத்தினது நீரிலுறைதலாகிய தவஞ்செய்தற்குப்பலனாகாத

பதசாயுச்சியமடைதலிற் பலத்தன்மை யத்தியவசயிக்கப் பட்டது-பதசாயுச்சியமடைதலாகிய விஷயங்கமலத்திற் குமெய்ம்மையாக வின்மையா லில்புலமாம்.பலத்தன்மை விஷயி.

யரு. உயர்வுநவிற்சியணி. அஃதாவது-ஒருபொருளா னது தன்சொல்லாற்சொல்லப்படாமற்-கேட்போரைமகி ழ்விப்பதும் - இஃதஃதன்றென்றுதெரிந்துந் தன்னிச்சை யாலாமென்று கொள்ளப்படுவதுமாகிய வாரோபநிச்சய த்திற்குவிஷயமாகுதலாம். இதனை வடநூலார் அதிசயோ க்தியலங்காரமென்பர். அது ஏழுவகைப்படும்-அவற்றுள்-ஙூ-வது. உருவகவுயர்வுநவிற்சி. இது உபமேயத்தையத ன்சொல்லாற்சொல்லாம லுப்மானச்சொல்லினு லிலக்க ணையாகச்சொல்லுதல். உம். புயலேசுமர்தபிறையேயணி ந்து பொருவிலுடன்-கயலேமணந்தகமலமலர்ந்தொருசற் பகத்தி-னயலேபசும்பொற் கொடிநின்றதால்வெள்ளை ய ன்னஞ்செந்நெல்-வயலேதடம்பொய்கை சூழ்தஞ்சைவா ணன் மலையத்திலே. இதில்-புயன்முதலியவுபமானச்சொ ற்களாற் கூந்தன்முதலிய 'வுபமேயங்களிலக்கணையாகச் சொல்லப்பட்டன.—உ-வது. ஒழிப்புயர்வுநவிற்சி. இது முன்சொன்னவுயர்வுநவிற்சி யொழிப்போடுகூடிவருதல். உம். பைந்தொடிநின்சொல்லி லமுதுளதாற்பாமரர்க-ளி ந்துவிடத்துண்டென்பரோ. இதில்-அமிர்தமென்னப்பட்ட வுபமானத்தினுற் சொல்லிலிருக்கின்ற மாதுரியமாகிய வு பமேயஞ்சொல்லப்பட்டுச் சந்திரனிடத்தில்லையென்பதா லொழிப்பையுட்கொண்டிருக்கின்றது.—ங-வது. பிரிநிலை

யுயர்வுநவிற்சி. இது உலகத்திற்பிரசித்தமாகியதிரம் - உருவம்-செல்வம்-முதலியவைகட்கினமாகிய-திராதிகளைப்பிரித்துச்சொல்லுதல். உம். பாந்தண்முடியிற் பரிக்குங்குவலயத்திவ்-வேந்தனுந்திரமொன்றும்வேறு. எம். போதார்மலர்க்கூந்தற் பூவையிவள்படைப்புச் - சாதாரணமானதன்று-எம். வருமிவைகளில்-திரத்திலும் படைப்பிலு மிருக்கின்ற வபேதத்திற் பேதமாரோபிக்கப்பட்டது.—௪-வது. தொடர்புயர்வுநவிற்சி. இது சம்பந்தமில்லாதிருப்பச் சம்பந்தத்தைக்கற்பித்தல். உம். அகழுமிஞ்சியுமண்டத்தினடிமுடிகாணும்- புகுநமென்றுதம்மாற்றலான்முரணுபுகுங்கா லிகலும்வெஞ்சினச்சேடனேடிராகுவென்றுரைக்கு-நிகரில்பாம்புமெனறியிடைக்காண்டலுமின்ற. இதில்-சம்பந்தமின்மையிற் சம்பந்தமாரோபிக்கப்பட்டது. அன்றியுஞ் சம்பந்தமிருக்கச் சம்பந்தமில்லாமையைக்கற்பித்தலுமது. உம். கற்பகத்தின்மன்னவனேநீயருள்செயாநிற்பக-கற்பகத்தையாம்விரும்போங்காண். இதில்-கற்பகத்தை விரும்புதலின்சம்பந்தமிருக்க வதிலதனில்லாமையாரோபிக்கப்பட்டது.—௫-வது. முறையிலுயர்வுநவிற்சி. இது காரணமுங்காரியமு மொருகாலத்தினிகழ்வனவாகச்சொல்லுதல். உம். மன்னநின்கணையு மொன்னலர்கூட்டமு-மேககாலத்திறுணிகந்தோடினவெனி-லுன்புகழ்த்திறத்தியையுணர்ந்து - மன்பதையுலகுள் யார்பாடவல்லாரே. இதில்-அம்பினதுதாக்குகையாகிய காரணத்திற்கும்-அரசர்களினோட்டமாகிய காரியத்திற்கு முன்பின்றென்றதைத்தன்மையில்-ஒருகாலத்திலுண்டாகுதை கற்பிக்க

ப்பட்டது. "விரிந்தமதிநிலவின்மேம்பாடும்வேட்கை-புரிந்தசிலைமதவேள்போரும்-பிரிந்தோர் - நிறைதளர்வுமொக்கநிகழ்ந்தனவாலாவிப் - பொறைதளரும்புன்மாலைப்போழ்து." இதுவுமது.—கூ-வது. விரைவுயர்வுநவிற்சி. இது காரணவுணர்ச்சிமாத்திரத்திலே காரியமுண்டாதல். உம். அருளாக்குநல்லறமுண்டாக்குமின்புண்டாக்குந் - தெருளாக்குமென்றுளங்கொள்செம்மல்-பொருளாக்கற்-கேழையான்செல்வனெனப்புகலாநிற்பவிர- லாழிவளையாயிற்றவட்கு. இதில்-பிரிவுணர்ச்சியினாலேதானேநாயகியின்வாட்டமாகியகாரிய மோதிரம்வளையாயிற்றென்பதினால் விளங்கிற்று-காரியம்பிறத்தல்விஷயம்.—எ-வது. மிகையுயர்வுநவிற்சி. இது காரியத்வதமுன்றுங் காரணத்தைப்பின்றுநிகழ்வனவாகச்சொல்லுதல். உம். வணங்கியிறையின்சொல் வழங்குமுனம்பேதைக் - குணங்கூடனிங்கிற்றளத்து. இதில் - காரணகாரியங்களின்முன்பின் னிகழ்தலாகியமுறையில்-முறைபிறழ்வாரோபிக்கப்பட்டது - இறுதிக்கண்ணின்ற மூன்றலங்காரங்களுங் காரியவிரைவுஃவச் சொல்வனவாம்.

ம்ச. ஒப்புமைக்கூட்டம். அஃதாவது - வர்ணியங்களாகிய பலபொருள்களையாயினும் அவர்ணியங்களாகிய பலபொருள்களையாயினும் பொதுவாகியவொருதருமத்தின்முடித்தலாம். இதனை-வடநூலார் துல்லியயோகிதாலங்காரமென்பர் —ளகூ வது. புனைவுளியொப்புமைக்கூட்டம். உம். மாமதிதோன்றக்கணவர்த்திர்ந்த மடவார்முகமு

ந்-தாமரைப்பூவுஞ்சோர்ந்தன. இதில் - சந்திரோதயவர்ண லேயிற் சேர்ந்ததாமரைக்கும் பிரிவுற்றமாதர் முகங்களு க்கும் வாடுதலாகிய வொருதருமத்தின்முடிவுசெய்தது கா ண்க.—௨-வது. புனேவிலியொப்புமைக்கூட்டம். உ-ம்.இதி ல்கழைச்சாறுந்தெள்ளமுதமுங்கசக்கும் - கோதையிவள் சொல்லுணர்ந்தார்க்கு. இதில்-வசனமாதுரியவர்ணனேயி ல் அவர்ணியங்களாகிய கழைச்சாறுமுதலியவைகளுக்கு க்கசப்பாகிய வொருகுணத்திலேமுடிவுசெய்ததுகாண்க.- அன்றியுமுறவினரிடத்தும் பகையினரிடத்துஞ் சமனுகந டந்ததாகச் சொல்லுதலு மோரொப்புமைக்கூட்டம். உ-ம். வீரமிகுமன்னனிவன் விட்டார்க்குநட்டார்க்குந் - தாரணி யிலுக்கினனந்தல். இதில் - நட்டவர்க்குநந்தல் ஆக்கம்-வி ட்டவர்க்குநந்தல்கேடு.—"விரும்பிவளர்ப்போர்க்கும் வெ ட்டுதல்செய்வோர்க்குந் - தரும்வேம்புவெங்கசப்பைத்தா ன்." எனவரும்-இன்றும் உயர்வாகியபொருள்களோடுகூ ட்டிச்சொல்வதுமது. உ-ம். ஈகுநர்கள்கற்பகமு மின்கதிர் ச்சிந்தாமணியு-மேகமுமன் ஞரியுமே-எனவரும்.

௰௫. விளக்கணி-அஃதாவது-வர்ணியங்களு மவர்ணி யங்களுமொருதருமத்தின் முடிதலாம். இதனே-வடநூ லார்-தீபகாலங்காரமென்பர். உ-ம்.ஆதபத்தாற்சூரி யனும் பிரதாபத்தினன்-மேதகுவேந்தும்விளக்குமே. இதில்-சூரி யனும் வேந்தனும் விளக்குதலாகிய வொருதருமத்தின்மு டிந்தன.

௰சு. பின்வருவிளக்கணி. அஃதாவது-முன்வாக்கியத்தில்வந்த விளக்கச்சொல்லேனும் பொருளேனுஞ் சொல்லும்பொருளுமேனும் பின்வாக்கியங்களிலும் வருதலாம். இதனை வடநூலார் - ஆவர்த்திதீபகாலங்காரமென்பர்.—௧-வது. சொற்பின்வருவிளக்கு. உம். மாரனமுங்கம்பெய்யு மான்கணமுங்கம்பெய்யும்-வீரனின்றுவாராவிடின்.—உ-வது. பொருட்பின்வருவிளக்கு. உம். அவிழ்ந்தனதோன்றியலர்ந்தன காயா - நெகிழ்ந்தனநேர்முகைமுல்லை-மகிழ்ந்திதழ் - விண்டனகொன்றை விரிந்தகருவிளை கொண்டன-செங்காந்தள்குலே.—ங-வது. சொற்பொருட்பின்வருவிளக்கு. உம். மகிழ்ந்த நெடுஞ்சா தகமகிழ்ந்த தோகை-புகழ்ந்திடுகார்வானெழுந்தபோது.

௰எ. தொடர்முழுதுவமையணி. அஃதாவது-இரண்டு வாக்கியங்களிலுஞ் சாதாரணதர்மத்தைச்சொல்லுதலாம். இதனை வடநூலார் பிரதிவஸ்தூபமாலங்காரமென்பர். அது-இருவகைப்படும்.—௧-வது. நிகர்தொடர்முழுதுவமை. உம். தாபத்தினல்விளங்கும்வெய்யோன்றராபதிநீள் - சாபத்தினல்விளங்குந்தான்.—உ-வது. முரண்டொடர்முழுதுவமை உம். கற்றேனருமைகற்றேனேயறியும்வந்திமகப்-பெற்றேளருமையறியாள். இதில்-கற்றேனேயறியுமென்றதற்கு மலடியறியாளென்பதாற்றேன்றும்பெற்றவளேயறிவாளென்பதுபமானமாம். — சொற்பொருட்பின்வருவிளக்கிற்கு மிதற்கும்வேற்றுமை. அதில். வர்ணியங்களாவது அவர்ணியங்களாவது சொல்லப்படும். இதில் அவ்விரண்டுஞ்சொல்லப்படும்.

